

# OPPORTUNITY

KNOCKS ON YOUR DOOR



# MAKE FRIENDS

AND LET THE NETWORK GROW



# EARN

IN THE COMFORT OF YOUR HOME

You have been an avid reader of Chandamama, and here is a chance to associate yourself with the 54-year-old magazine and make money, too. Chandamama is appointing **SUBSCRIPTION AGENTS** throughout India. If you are above 18 years and love interacting with people, get in touch with us.

HURRY!
GRAB THIS
OPPORTUNITY!



CHANDAMAMA
INDIA LIMITED

82, Defence Officers' Colony,
Ekkatuthangal,
Chennai - 600 097.
Tele/fax : 234 7384 / 99
E-mail : subscription@chandamama.org

# அம்புலிமாமா

மதிமுகம் : 104 பிப்ரவரி : 2001 புன்னகை : 2



## பொருளடக்கம்



### சிறப்புப் படைப்பாக



கிடைத்த வாய்ப்பு (வேதாளம் சொல்லும் கதை)

மாயாஜால மலை





இந்தியப் பண்பாடு - வரலாறு

மன்னனின் யுக்தி



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, No.82, Defence Officers Colony, Ekkattuthangal, Chennai - 600 097. Editor: Viswam

நீங்கள்

அயல்நாடுகளில்
உள்ள உங்கள்
உறவினர், நண்பர்களுக்கு



# அம்புலிமாமா

இதழை அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

**அஸ்ஸாமி, வங்காளம், ஆங்கிலம்,
ஹிந்தி, குஜராத்தி, கன்னடம்,
மலையாளம், மராட்டி, ஒரியா,
சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு**

அயல் நாட்டிலும் தாய்நாட்டில் உள்ள
மகிழ்ச்சியை அவர்கள் அனுபவிக்கட்டும்

## சந்தா விவரம்

எல்லா நாடுகளுக்கும் விமானத்தபாலில்
பன்னிரெண்டு பிரதிகளுக்கு ரூ.900.

இந்தியாவில் தரைவழித் தபாலில்
பன்னிரெண்டு பிரதிகளுக்கு ரூ.120.

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டி.யில் அல்லது
மணியார்டரில் 'சந்தமாமா இந்தியா லிமிடெட்'
என்ற பெயர் எழுதி அனுப்பவும்

முகவரி :

பதிப்பகப் பிரிவு
சந்தமாமா இந்தியா லிமிடெட்
82, டிபென்ஸ் அதிகாரிகள் காலனி
ஈக்காட்டுத்தாங்கல் சென்னை - 600 097.

ஆசிரியர்
விஸ்வம்

எல்லாக் கடிதப்
போக்குவரத்திற்கும்
சந்தமாமா
பத்திரிக்கைப் பிரிவு
82, டிபென்ஸ்
அதிகாரிகள் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல்,
சென்னை - 600 097.

டெலி / பேக்ஸ் :
2347384, 2347399

ஈ-மெயில் :
சந்தமாமா
@வி.எஸ்.என்.எல்.காம்

அமெரிக்காவில் தனிப் பிரதி 2
டாலர்கள் வருட சந்தா : 20 டாலர்கள்
பணம் அனுப்ப
வேண்டிய முகவரி :

இந்தியா அப்ராட்
43, வெஸ்ட் 24வது தெரு
நியூயார்க், என்.ஒய்.10010

டெலிபோன் : (212) 929 1727
பேக்ஸ் : (212) 627 9503



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# புதிய நூற்றாண்டில் அம்புலிமாமா

இன்றைய அம்புலிமாமா வாசகர்களால் அம்புலிமாமா ஆரம்ப நாட்களில் எப்படி இருந்தது என்று நினைத்துக் கூட பார்க்க முடியாது. அம்புலிமாமா நம் நாடு சுதந்திரம் அடைந்த போது தன் முதல் இதழை வெளியிட்டது. அப்போது தொலைக்காட்சியோ, கம்ப்யூட்டரோ, இன்டர்நெட்டோ அல்லது தற்போதைய நவீன அச்சடிக்கும் வசதியோ இருக்கவில்லை. ஒவ்வொரு எழுத்தாகக் கையால் எடுத்துக் கோர்த்துப் பக்கங்களாக்கித் தான் பத்திரிகை அச்சடிக்கப் பட்டது.

உங்கள் தாய், தந்தையரும், மூத்தவர்களும் படித்த அம்புலி மாமாவை விடத் தற்போது வெளிவரும் அம்புலிமாமா தொழில் நுணுக்கங்களால் மிளிர்கிறது. இந்த முன்னேற் றத்துடன் நின்றுவிடாமல் அம்புலிமாமா புதிய துறைகளிலும் அடியெடுத்து வைக்கப் போகிறது. இந்தியப் பண்பாட்டை விளக்க அம்புலிமாமாவின் துணையுடன் நம் நாட்டிலும் வெளிநாடுகளிலும் எவ்வளவோ பத்திரிகைகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அம்புலிமாமா பல இந்திய மொழிகளில் வெளியாவதுடன் தற்போது தொலைக்காட்சி வாயிலாகப் பணிபுரியப் போகிறது. 1970-80ல் வெளிவந்த கதைகளைச் சின்னத் திரைக்கேற்ப வடிவாக்கி இம்மாதம் முதல் ஹைதரா பாதிலிருந்து ஒளிபரப்பப்படும். இக்கதைகள் அறிவுரைகளைப் புகட்டி நம் பண்பாட்டை உயர்த்துபவை என்று வாசகர்களின் பாராட்டுதல்களைப் பெற்றவை.

விஞ்ஞான நவீன சாதனைகளைப் பயன்படுத்தி அம்புலி மாமா யாவரையும் களிப்பித்து நல்வாழ்க்கையை யாவருக்கும் அமைத்துக் கொடுக்கும் முயற்சியில் என்றென்றும் ஈடுபட்டுத் கொண்டே இருக்கும்.



# செய்திச்சுடர்

## நிற்காத சொற்பொழிவு



சொற்பொழிவுப் போட்டிகளில் பேச்சாளர்கள் நான்கு அல்லது ஐந்து நிமிடங்கள் பேசவே மிகவும் சிரமப்படுவதைக் காண்கிறோம். சிலர் தாம் பேசும் பொருள் பற்றி விளக்க மேலும் கொஞ்ச நேரம் எடுத்துக் கொண்டிருக்கலாம் என்று நினைப்பதும் உண்டு. சென்னையில் 'பெண்களின் இன்றைய சமுதாய நிலை' என்ற பொருள் பற்றி தமிழ்நாட்டின் தேனியைச் சேர்ந்த 27 வயதான காசிநாதன் என்ற இளைஞர் சொற்பொழிவாற்றினார். இவர் தம் பேச்சை நவம்பர் 3 காலை 10 மணிக்குத் தொடங்கி 30 மணி நேரம் பேசி மறுநாள் மாலை நான்கு மணிக்குத்தான் முடித்தார். இவர் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற விரும்புகிறார். இவர் இதற்கு முன் ஒரே பொருளில் 24 மணி நேரம் பேசிய நியூஜிலாந்தின் 64 வயதான மைக்கேல் மாரலின் சாதனையை முறியடித்து விட்டார். இவரது பேச்சைப் பல பிரமுகர்களும், சென்னையின் உயர்நீதிமன்ற நீதிபதி ஒருவரும் கேட்டு ரசித்தனர்.

## பார்வையற்றோருக்குப் பூங்கா

இந்தப் புத்தாண்டின் பரிசாகப் பார்வையற்றவர்களுக்கு நம்நாடு ஒரு பூங்காவை லக்னௌவில் வழங்கியுள்ளது. தேசிய தாவர ஆய்வுக்கழகம் அளித்த இப்பூங்கா தான் இத்தகைய முதலாவது சிறப்புப்பூங்காவாக உலகில் திகழ்கிறது. இதில் மலர்களை நுகர்வதோடு உணர்வதுடன் அவை பற்றிய விவரங்களை பிரெயில் எழுத்துக்களில் அவர்கள் படித்து மகிழலாம். அச்செடிகளைப் பற்றியும், அவற்றின் கனிகள் பற்றியும் அவர்கள் அறிந்தும் கொள்ளலாம். இவ்விவரங்கள் ஒருவர் படிக்க தோள் உயரத்தில் வைக்கப்பட்டுள்ளன. அதற்குப் பக்கத்திலேயே வைக்கப்பட்டுள்ள தொலைபேசியை ஒருவர் கையில் எடுத்துக் கேட்கத் தொடங்கினால் அத்தாவரம் பற்றிய அனைத்து விவரங்களையும் அவரால் கேட்க முடியும். இவர்கள் பயன்படுத்த சக்கர நாற்காலி வண்டிகளும் இப்பூங்காவில் வைக்கப்பட்டுள்ளன.



## தாஜ்மஹல் மறைந்தது !



தாஜ்மஹல் மறைந்து போயிற்றே என்று இரண்டு நிமிடங்கள் கச்புரா மக்கள் திகைத்துப் போனார்கள். யமுனை நதிக்கரையில் அமைந்துள்ள இந்த ஊரிலிருந்து 400 மீட்டர் தொலைவிலுள்ள தாஜ்மஹலை எவ்விதத் தடையும் இல்லாமல் எப்போதும் பார்க்க முடியும். ஆனால் அதை மறைந்து போகும்படித் தாம் செய்து காட்டுவதாக ஜூனியர் பி. சி. சர்கார் என்ற மாயாஜால வித்தைக்காரர் அவ்வூரில் அறிவிக்கவே, அது உண்மையா எனக் காண அந்த ஊரார் ஓரிடத்தில் கூடி நின்றார்கள். ஆம் ! சர்க்கார் தம் வித்தையால் அவர்களது பார்வையிலிருந்து அதை இரண்டு நிமிட நேரத்திற்கு மறைந்து போகும்படிச் செய்தார்! அதன்பின், அவரது மகள் மேனகா இரண்டு நிமிடங்களானதும் மீண்டும் தாஜ்மஹலை அவர்கள் பார்க்கும்படிச் செய்தார். தான் அதிருஸ்ய ரச முறையால் இதைச் செய்ததாக சர்க்கார் கூறினார்.

## கற்பனைப்பலகை




இது அக்டோபர் 31ல் ஜப்பானில் கியோடோவில் நடந்த நிகழ்ச்சி. ஒரு கணிதப்போட்டியில் 992,587318 ஐ 5,647,723 ல் வகுக்கும்படிக் கூறப்பட்டது. இதற்குக் கால்குலேடரோ கம்ப்யூட்டரோ பயன்படுத்தக் கூடாது என்பது விதி. எல்லாம் மனதிற்குள் போட்டுப் பார்த்துக் கொண்டாக வேண்டும். எல்லோரும் மண்டையை உடைத்துக் கொண்டிருக்கையில் 13 வயதுச்சிறுவனான ஹிரோகித்சுசியா நொடிப்பொழுதில் விடை கிடைத்து விட்டது எனக் கூவினான். அவன் தனது விடையை 0175750000132796881150155558266658 என்று கரும்பலகையில் எழுதினான். இது சரியான விடையே. இதற்கு அவன் அன்ஜான் என்ற முறையைப்பயன் படுத்தினான். சீனாவின் இந்த முறை கி. பி. 1500 ல் ஜப்பானுக்குத் தெரிய வந்தது. இம்முறையை அச்சிறுவன் கற்பனையில் நிறுத்திக்கணக்கிட்டு விடையைக் கண்டான். இம்மாதிரி முறைகளை அறிந்து விட்டால் கம்ப்யூட்டர்களும் கால்குலேட்டர்களும் பயனற்று போய் விடும்.

# வாக்குத் தவறவில்லை

நஞ்சப்பன் நகருக்கு வெளியே இருந்த ஒரு வீட்டை விலைக்கு வாங்கினான். அங்கு வேறு வீடுகள் எதுவும் இருக்கவில்லை. அவன் வாங்கிய வீட்டின் மேல்புறத்தில் ஒரு குடிசையும், கீழ்ப்புறத்தில் இன்னொரு குடிசையும் இருந்தன. அமைதியான சூழ்நிலை இருப்பது கண்டு மகிழ்ந்து நஞ்சப்பன், தான் வாங்கிய புது வீட்டிற்குக் குடி புகுந்தான். ஆனால், முதல் நாளிரவே அவனால் நிம்மதியாகத் தூங்க முடியவில்லை.

அதற்குக் காரணம் கீழ்ப்புறக் குடிசையிலிருந்த தச்சன் மரத்துண்டுகளை ரம்பத்தால் அறுத்துக் கொண்டிருந்ததும், மேல்புறக் குடிசையிலிருந்த கொல்லன் காய்ச்சிய இரும்பைச் சம்மட்டி கொண்டு அடித்துக் கொண்டிருந்ததும் தான். மறுநாள் காலை நஞ்சப்பன் தன் வேலையாள் முனியனை அழைத்து, "நீ இந்த இரண்டு குடிசைக்காரர்களிடமும் வீட்டை மாற்றிக் கொண்டு போய் விடும்படிச் சொல். அவர்கள் அவ்வாறு போக ஆளுக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேன்", என்றான். முனியனும் அவர்களை அழைத்து வரவே, நஞ்சப்பன் அவர்களிடம் தன் யோசனையைக் கூறவே, அவர்களிருவரும் வீடு மாறிப்போய் விடுவதாகக் கூறி ஆளுக்கு ஆயிரம் ரூபாயாக வாங்கிக் கொண்டு போனார்கள்.

ஆனால் அன்றிரவும் ரம்பத்தால் அறுக்கும் சத்தம் மேல்புறக் குடிசையிலிருந்தும், சம்மட்டியால் அடிக்கும் சத்தம் கீழ்ப்புறக் குடிசையிலிருந்தும் வரவே நஞ்சப்பனால் தூங்க முடியவில்லை. காலையில் தன் வேலையாள் முனியனை அழைத்து, "என்ன முனியா! இந்த இரண்டு குடிசைக்காரர்களும் வீடு மாறவில்லையா?" என்று கேட்டான்.

முனியனும், "அவர்கள் வாக்குத் தவறவில்லை. வீடு மாறிவிட்டார்கள். தச்சன் கொல்லன் வீட்டிற்குக் குடிபோய் விட்டான். கொல்லன் தச்சன் வீட்டில் குடிபுகுந்து விட்டான்", என்றான். அது கேட்டு நஞ்சப்பன் திகைத்து நின்றான்.



வேதாளம் சொல்லும் கதை

# கிடைத்த வாய்ப்பு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான், பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் நீ இப்படி சிரமப்பட்டு ஏதோ ஒன்றைச் செய்ய முயல்வதைப் பார்த்தால் உனக்கு ஏதோ ஒரு நல் வாய்ப்பு கிடைக்கத்தான் இவ்வாறு



செயல்படுகிறாயோ? சில சமயங்களில் நல்வாய்ப்பு கிடைத்தாலும் அதை நழுவ விட்டுவிடுகிற வர்களும் உண்டு. இதற்கான கதை ஒன்றைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!" என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

விந்தியமலைச் சாரலில் ஒரு விறகு வெட்டி குடிசை போட்டுக் கொண்டு தன் மகள் மல்லியுடன் வாழ்ந்து வந்தான். மல்லி தன் சிறு வயதிலேயே தன் தாயை இழந்து விட்டாள். அவளை வளர்த்து வந்த விறகு வெட்டி அவளது திருமணம் பற்றிக் கவலைப்படலானான். ஏழையான அவனால் வரதட்சிணை என்றெல்லாம் கொடுக்க முடியாதே !

இப்படி இருக்கையில் ஒரு நாள் விறகுவெட்டியின் மூத்த சகோதரி உடல் நலமில்லாமல் படுத்திருப்பதாகவும், அவனைப் பார்க்க விரும்புவதாகவும் தகவல் வந்தது. எனவே, அவளைப் பார்க்கக் கிளம்பிய அவன் தன் மகள் மல்லியிடம், "மல்லி! இன்று ராத்திரிக்குள் திரும்பி வந்து விடுவேன்" என்று கூறி விட்டுச் சென்றான்.

அன்று மாலை ஆகாயத்தில் மேகங்கள் சூழவே, பகலில் இருந்த வெப்பம் தணிந்தது.

மல்லி தான் வளர்த்து வந்த மலர்ச் செடிகளில் இருந்து மலர்களைக் கொய்து எடுத்து வந்து, ஓரிடத்தில் உட்கார்ந்து பாடிக்கொண்டே மாலை தொடுத்துக் கொண்டிருந்தாள். அப்போது திடீரென ஒரு குரல் "ஆகா...! என்ன இனிய குரல், குயில் கூட இதைக் கேட்டு வெட்கித் தலை குனியும்" என்றது. யார் அவ்வாறு கூறுவது என்று மல்லி தலை நிமிர்ந்து பார்த்தாள்.

தன் குடிசையின் வேலியை ஒட்டி ஒரு வாலிபன் நின்று கொண்டிருப்பதை அவள் கண்டாள். அப்போது அந்த வாலிபன், "என் பெயர் பாலகிருஷ்ணன். இசை என்றால் எனக்கு உயிர். உன் குரலும், பாட்டும் ரசிக்கத் தக்கதாக இருந்தது. அதனால் தான் பாராட்டினேன்" என்றான். அவனுக்கு என்ன பதில் கூறுவது என்று யோசித்துக் கொண்டிருக்கையில் மழை பலமாகப் பெய்ய ஆரம்பித்தது. அது கண்டு மல்லி பாலகிருஷ்ணனைப் பார்த்து, "மழையில் நனையாதீர்கள். உள்ளே வாருங்கள்" என்றாள்.

பாலகிருஷ்ணனும் ஓடி வந்து

குடிசைக்குள் நின்றான். அவனை அங்குள்ள ஓர் இருக்கையில் உட்காரச் சொன்னாள்.

அப்போது வெளியிலிருந்து யாரோ ஒருவர், "ஐயா! உள்ளே யார் இருப்பது? வெளியில் ஒரே மழை, நின்ற பாடும் இல்லை. அதனால் நான் உள்ளே வரலாமா?" என்று கேட்டார். மல்லியும் உள்ளிருந்த படியே எட்டி பார்த்தாள். அழகான வாலிபன் ஒருவன் மழையில் நனைந்து நின்றவாறே, "என் பெயர் சுந்தர மூர்த்தி. ஒரு நண்பனின் திரு மணத்திற்குப் போய்விட்டு இவ்வழி யாக வந்து கொண்டிருந்தேன். அதனால் மழையில் அகப்பட்டுக் கொண்டு விட்டேன்" என்றான். அப்போது வெளியிலிருந்து ஒருவன் ஓடி வந்து குடிசைக்குள் நுழைந்த வாறே, "உங்கள் அனுமதி இல்லா மலே உள்ளே நுழைந்து விட்டேன். மன்னிக்கவும்!" என்று கூறினான். மல்லியும், "பரவாயில்லை. இவர் களைப்போலத்தான் நீங்களும்!" என்றாள்.

வந்தவனும், "என் பெயர் அண் ணாமலை. வியாபார விஷயமாக இவ்வழியில் நகரத்திற்குப்போய்க் கொண்டிருந்தேன். திடீரென மழை பெய்து கொண்டிருந்ததால் இங்கே வந்தேன்" என்று கூறினான். சற்று நேரத்திற்குப் பின் மழையும் நின்றது. பாடகன் பாலகிருஷ்ணனும் மல்லி யிடம், "மிக்க நன்றி. மழையும் நின்று விட்டது. உன் இனிய கானம் இன்ன மும் என் காதில் ஒலித்துக் கொண்டே




இருக்கிறது. எனக்கு உன்னை மிகவும் பிடித்து விட்டது. திருமணம் பற்றி பேச நாளை என் தந்தையை இங்கு அனுப்புகிறேன். அவர் உன் தந்தை யிடம் பேசி நம் திருமணத்தை நிச்சயிப்பார்" என்று கூறி விட்டுச் சென்றான்.

சுந்தரமூர்த்தியும் மல்லியிடம், "மழை நின்று விட்டது. நானும் கிளம்புகிறேன். உன் போன்ற அழகி தான் எனக்கு மனைவியாக வர வேண்டும் என்று நான் ஆசைப் பட்டேன். நம் திருமணம் பற்றிப் பேசி நிச்சயிக்க நாளையே என் பெற்றோர்களை இங்கு அனுப்பு கிறேன்" என்று கூறி விட்டுச் சென்றான். அடுத்து அண்ணாமலை யும், "மழையும் நின்று விட்டது. எல் லோரும் போய் விட்டார்கள். நானும்



புறப்படுகிறேன். உன்னை எனக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று. நகரில் என் தந்தை மிகப்பெரிய வியாபாரி. லட்ச லட்சமாக சம்பாதிக்கிறார். நான் உன்னை மணந்து கொள்கிறேன். அது பற்றி உன் தந்தையிடம் பேச நாளையே என் தந்தையை அனுப்பி வைக்கிறேன்" என்று கூறிவிட்டுச்சென்றான்.

நன்கு இருட்டிய பிறகு தான் விறகு வெட்டி தன் குடிசைக்குத் திரும்பி வந்தான். மல்லியும் தன் தகப்பனாரிடம், "அத்தையின் உடம்பு எப்படி இருக்கிறது? நலமாகத் தானே இருக்கிறார்?" என்று கேட்டாள். விறகு வெட்டியும், "நாம் பயப்படக் கூடிய விதத்தில் எதுவும் இல்லை. ஆனால், அவள் மனதில் தான் விரைவில் இறந்து விடுவோமோ என்ற பயம் இருக்கிறது. தான் இறப்பதற்கு முன் தன் ஒரே மகனான முருகனின் திருமணம் நடந்து விட வேண்டும் என்று விரும்புகிறாள்" என்றான். மல்லியும், "இதில் என்ன யோசிக்க இருக்கிறது? அத்தான் விரும்பும் பெண்ணை அவருக்குத் திருமணம் செய்து வைத்து விட்டால் பிரச்சினை தீர்ந்து விடுமே!" என்றாள்.

அப்போது விறகுவெட்டி, "உன் அத்தை தன் மகனுக்கு நிறைய வரதட்சிணை கொடுக்கக் கூடிய இடமே வேண்டுமென்று என்னிடம் பல முறை கூறினாள். அவள் அவ்வாறு சொன்னதால் உன்னை முருகனுக்குத் திருமணம் செய்து வைக்க என்னால் முடியாது என்பது எனக்குத் தெரிந்து விட்டது. இப்போது அவளே அந்தப் பேச்சைத் துவக்கி நீ அவனை மணந்து கொள்வதைத் தன் கண்ணாறப்பார்க்க வேண்டும் என்கிறாள். நானும் இத்திருமணம் எனக்கு சம்மதமே என்று கூறினேன். ஆனால் முருகனோ உன் விருப்பம் என்ன என்று அறிந்து கொள்ள வேண்டும் என்கிறான். இது தான் விஷயம்" என்றான்.

மல்லி புன்னகை புரிந்தவாறே, "அப்பா! இன்று மத்தியானம் இங்கே ஒரே மழையாக இருந்தது. அப்போது மழையில் நனைந்து கொண்டு மூன்று இளைஞர்கள் நம் வீட்டிற்கு வந்தார்கள். அவர்களில் ஒருவர் பாடகர், இன்னொருவர் அழகானவர், மூன்றாமவர் பணக்கார வியாபாரி. மூவருமே என்னை மணக்க விரும்புவதாகக் கூறி நாளை தம் பெற்றோர்களை உங்க

ளிடம் பேச அனுப்பி வைப்பதாகக் கூறி விட்டுப் போனார்கள்" என்றாள்.

அவளது தந்தையும், "அப்படியா? அந்த மூவரும் நல்ல வசதியான குடும்பங்களில் பிறந்தவர்களாகத் தான் இருக்க வேண்டும். அதனால் உன் அத்தான் முருகன் விஷயத்தை விட்டு விடுவோம். அந்த மூவரில் உனக்கு யாரைப் பிடித்திருக்கிறது?" என்று கேட்டான். மல்லியோ சற்றும் தயங்காமல், "அவர்களில் யாரையுமே எனக்குப் பிடிக்கவில்லை. எனக்கு என் அத்தான் முருகனைத் தான் பிடித்திருக்கிறது" என்றாள்.

வேதாளம் இக்கதையைக் கூறி, "மன்னனே! மல்லி தவறு தானே செய்து விட்டாள்? வசதியான அந்த மூன்று இளைஞர்களும் அவளை மணக்க விரும்பினார்களே! அவர்களில் ஒருவரை அவள் தேர்ந்தெடுத்து வசதியான வாழ்க்கையை அடைந்திருக்கக் கூடாதா? காட்டிலே திரிந்து, படிப்பு வாசனையே இல்லாத அத்தான் முருகனையே அவள் மணந்து கொள்ளப்போவதாக ஏன் கூறினாள்? இக்கேள்விகளுக்குச் சரியான விடைகள் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும், "அந்த மூன்று வாலிபர்களும் மல்லியை மணக்க விரும்புவதாகக் கூறிய போதிலும் அவர்கள் அது பற்றி மல்லியின் அபிப்பிராயம் என்ன என்று கேட்கவில்லை. ஆனால் முருகனின் தாயும், மாமனும் அவர்களது திருமணத்திற்குச் சம்மதித்தும் கூட, முருகன் மல்லியின் விருப்பத்தை அறிந்து கொண்ட பிறகே தன் சம்மதத்தைத் தெரிவிக்க விரும்பினான். எனவே தான் அவள் தன் அத்தானை மணப்பதாகக் கூறினாள். மல்லி தன் திருமண விஷயத்தில் தவறு செய்யவில்லை. அவள் முருகனை மணப்பதாகக் கூறியது மிகவும் சரியே!" என்றான்.

விக்கிரமனின் சரியாக இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டு விட்டது.



## அன்று இதே மாதத்தில் பிறந்தவர்

தனது பதினோறாவது வயதிலேயே ஆங்கிலத்தில் கவிதை எழுதிய சிறுமியைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? ஹைதராபாதில் 1879 பிப்ரவரி 13ல் பிறந்த 'கவிக்குயில்' சரோஜினி தேவியார் தாம் அவர். இவரது தந்தை அகோரநாத சட்டோபாத்தியாயா தான் இவரை இத்துறையில் மிகவும் ஊக்குவித்தவர். அவரும் ஒரு கவிஞரே. இவரது தாய் வரதசுந்தரி தேவி நல்ல பாடகி. பாடல்களையும் வங்காள மொழியில் எழுதியுள்ளார்.

பல பேரறிஞர்கள் சரோஜினி தேவியின் படைப்புகளைப் பாராட்டியுள்ளார்கள். இவரது 'கோல்டன் த்ரெஷ்ஹோல்ட்' பெரிதும் பாராட்டப்பட்ட படைப்பு. இவரது குடும்பத்தவரின் பலத்த எதிர்ப்புகளிடையே இவர் 1898ல் டாக்டர் நாயுடுவை மணந்து கொண்டார். இது கலப்புத் திருமணம். ஹைதராபாதில் இவர் தம் வாழ்க்கையில் முஸ்லிம்களுடன் பழகும் வாய்ப்பினைப் பெற்றார். இவர் மக்களின் கருத்துகளுக்குப் பெரும் மதிப்பை அளித்தவர்.

பெண்களின் உரிமைகளுக்காகப் போராடியவர் இவர். பெண்கள் படித்தாலே வாழ்க்கையில் முன்னேற முடியுமென இவர் உறுதியாக நம்பினார். மேலும் பெண்களுக்கும் வாக்குரிமை வேண்டுமென இவர் வலியுறுத்தினார். இவர் அரசியலில் சேர்வதற்கு முன் தென்னாப்பிரிக்காவில் காந்திஜீயுடன் சேர்ந்து அங்கிருந்த நிறவெறி அரசாங்கத்தை எதிர்த்துப் போரிட்டார்.

இந்திய அரசியலில் இவரை அறிமுகப்படுத்தியவர் கோபால கிருஷ்ண கோகலே. அனைத்திந்திய ஹோம் ரூல் லீக்கின் உறுப்பினராக இவர் 1919ல் லண்டனுக்குச் சென்றார். அங்கு பெண்களின் உரிமை பற்றிய பேசினார். ஜாலியன் வாலாபாக் படுகொலைக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் இவர் பிரிட்டிஷ்



சரோஜினி நாயுடு

அரசாங்கம் தமக்கு அளித்திருந்த 'கேய்ஸர் ஏ ஹிந்த்' என்ற பட்டத்தைத் துறந்தார்.

இவர் 1925ல் கான்பூரில் நடந்த இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபைக்குத் தலைமை தாங்கினார். இவரது சொற்பொழிவு அப்போது மக்களின் தேசிய உணர்ச்சியை மேலும் ஊக்குவித்தது. 1930ல் நடந்த உப்பு சத்தியாக்கிரகத்தில் இவர் ஆற்றிய மாபெரும் தொண்டு தொண்டர்களை மகிழ்ச்சி அடையச் செய்து உற்சாகத்தையும் அளித்தது.

'வெள்ளையனே வெளியேறு' என்று 1942ல் நடந்த இயக்கத்தின் போது காந்திஜீ கைது செய்யப்பட்டு புனேவிலுள்ள ஆகாகான் அரண்மனையில் சிறைப்படுத்தப்பட்டார். சரோஜினி தேவியாரும் அச்சிறையில் அவருடன் அடைக்கப்பட்டார். காந்திஜீ இவரை 'இந்தியக் கவிக்குயில்' என்றும், 'இந்தியாவின் வானம் பாடி' என்றும் புகழாரம் சூட்டினார்.

இந்தியா சுதந்திரம் அடைந்ததும், இவர் உத்திரப்பிரதேசத்தின் மாநில ஆளுநராகப் பதவி ஏற்றார். ஆயினும் இவர் இதனைத் தம் சுதந்திரப் போக்கிற்குத் தடை விதிப்பது போலத்தான் கருதினார். அதற்காக அவர் தம் பொறுப்புகளையும், கடமைகளையும் தட்டிக் கழிக்காமல் அப்பதவியை செவ்வனே திறம்பட வகித்து வந்தார்.

1949 மார்ச் 2ல் இவர் அமரரானார்.



# மாயாஜால மலை

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் பிரம்மபுத்திர நதிக்கரையிலிருந்த ஒரு காட்டில் பல மலைச்சாதி இனங்கள் வாழ்ந்து வந்தன. அவற்றில் ஒன்று தான் காண்டாமிருகத்தவர்கள். இவர்கள் மலைப் பகுதியில் ஆரணியபுரம் என்ற குடியிருப்பை அமைத்துக் கொண்டு ஒன்று கூடி வாழ்ந்து வந்தார்கள். காட்டு காண்டாமிருகங்களைப் பிடித்துப் பழக்கி அவற்றை விவசாய வேலைகளுக்குப் பயன்படுத்தியும் சவாரி செய்ய உபயோகித்தும் வந்தார்கள். இதனால் தான் இவர்களுக்கு 'காண்டாமிருகத்தவர்கள்' என்ற பெயர் ஏற்பட்டது.

இவர்களின் தலைவன் இவர்களது மன்னன். அவன் பெயர் ஆரணிய மல்லன். அவனை ஒழிக்க அவர்களின் சோதிடன் ஒருவன் முயன்றான். ஆனால் ஆரணியமல்லன் இருக்ஷத்திய வாலிபர்களின் உதவியுடன் அச் சோதிடனின் சதியை அம்பலப் படுத்தி அவனைப் புலிக்கு இரை யாக்கி விட்டான்.

ஆரணியமல்லன் மன்னனாகி ஓராண்டு ஆகியது. இதை காண்டா மிருகப்பிரிவினர் ஆண்டு விழாவாகக் கொண்டாடினர். அவனும் வேலைப் பாடுடன் கூடிய கல்லாலான சிம்மா சனத்தில் அமர்ந்து அக்கொண்டாட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது இரு காண்டாமிருக இன வீரர்கள் தம் காண்டாமிருகங்களின் மீது அமர்ந்து வேகமாக அங்கு வந்து கீழே இறங்கினார்கள்.

அவர்களைக் கண்டு மன்னனின்



அமைச்சனான சீலமுகன் அவர்களருகே சென்று, "என்ன விஷயம்? ஏன் இப்படி ஓடி வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டான் சற்றுக் கோபத்துடன். வந்தவர்களில் சற்று மூத்தவன், "ஐயா! நம் மலை அடிவார வயல்களில் யாரோ சில புதியவர்கள் புகுந்து நம் சோளக் கதிர்களை எல்லாம் அறுத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இப்பகுதிகளிலேயே இல்லாத ஒரு புது வித மிருகங்களின் மீது ஏறி வந்திருக்கிறார்கள்" என்றான். அது கேட்டு சீலமுகன், "என்ன சொன்னாய்? புது வித மிருகமா? அது எப்படி இருக்கிறது என்று சொல்?" என்று கேட்டான்.

அந்த வீரனும், "அது யானை போல உயரமாக உள்ளது. மூங்கில் போன்ற கால்கள், கொக்கின் கழுத்து போல அதன் கழுத்து நீண்டு, வளைந்துள்ளது" என்றான். அது கேட்டு சீலமுகன் அந்த இருவீரர் களையும் கூட்டிக்கொண்டு போய் ஆரணிய மல்லனின் முன் நிறுத்தி, "நீங்கள் கண்டதைச் சொல்லுங்கள்" என்றான். அவர்களும் யாரோ புதியவர்கள் வயல்களின் பயிர்களை அறுப்பதையும் அவர்கள் ஏறி வந்த புதுவித மிருகங்கள் பற்றியும் கூறினார்கள்.

அதைக் கேட்ட ஆரணியமல்லன், "நாம் கஷ்டப்பட்டு பயிர் செய்த சோளக் கதிர்களை யாரோ கொள்ளைக்காரர்கள் கொள்ளை அடிப்பதையும், அவர்கள் சவாரி செய்து வந்த புதுவித மிருகங்கள் பற்றியும் கூறுகிறீர்களே! உங்களுக்கு வெட்கமாக இல்லை? அவர்களை அடித்து விரட்ட உங்களுக்குத் துணிவு இல்லையா?" என்று கோபத்தோடு கேட்டவாறே தன் ஆசனத்தில் இருந்து எழுந்தான்.

அப்போது அமைச்சர் சீலமுகன் எல்லோரையும் பார்த்து, "இனி இந்தக் கொண்டாட்டங்களை நிறுத்தி விட்டு கொள்ளைக்காரர்களை எதிர்க்க விரைந்து செல்வோம். நம் பயிர் கொள்ளை போகாமல் நாம் காக்க வேண்டும்" என்றான். உடனே பலர் ஈட்டிகளையும், வாட்களையும் எடுத்துக்கொண்டு, காண்டாமிருகங்களின் மீது உட்கார்ந்து கொண்டு செல்ல, சீலமுகனும் ஒரு காண்டா மிருகத்தின் மீது அமர்ந்து அவர்களோடு சென்றான். அவர்கள் சோளப் பயிர் வயல்களை அடைந்த போது அவற்றின் நிலை கண்டு அதிர்ச்சி

அடைந்தார்கள்.

அந்தக் கொள்ளைக்காரர்களையும் அவர்களுடன் இருந்த மிருகங்களையும் கண்டு காண்டாமிருகத்தவர்கள் பயந்து போனார்கள். கொள்ளைக்காரர்களில் ஒருவன் அவர்களைப் பார்த்துவிட்டதும் தன் கையிலிருந்த ஈட்டியை உயரத் தூக்கியவாறே தன் ஆட்களிடம், "பாருங்கள் காண்டா மிருகத்தவர்கள் வந்திருக்கிறார்கள். ஆனால், அந்த சூரப்புலிகள் நம்மைப் பார்த்து பயந்துவிட்டார்கள் போலிருக்கிறது" என்றான். அதைக் கேட்டு கொள்ளைக்காரர்களின் தலைவன் "ஒட்டக வீரர்களே...! இந்தக் காண்டாமிருகத்தவர் நம்மைப் பார்த்து பயந்து விட்டார்கள். ஒருவன் கூட நம்மைத் தாக்க முயலவில்லை. அதனால் நாமே அவர்களைச் சுற்றி வளைத்துப் பிடிக்கலாம்" என்று கூறினான். கொள்ளைக்காரர்கள் வேகமாக வந்து அவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள். சீலமுகன் தன் ஆட்களுக்கு உற்சாக மூட்ட உரத்த குரலில், "ஜெய் ஆரணியமாதா!" என்று உரக்கக் கூவி, "வீரர்களே! இவர்களைத் தாக்குங்கள்" என்றான்.

அப்போது அருகிலிருந்த ஒரு மரத்திலிருந்து, "அமைச்சர் சீலமுகரே! இந்தக் கொள்ளைக் காரர்கள் ஏறி அமர்ந்துள்ள மிருகங் களை 'ஒட்டகங்கள்' என்று கூறு கிறார்கள். இவற்றைப் பற்றி அண்மை யில் தான் கேள்விப்பட்டேன். அவை ஒன்றும் பயங்கரமான மிருகங்கள் அல்ல.



உங்கள் காண்டாமிருகங் களை ஏவி அவற்றைத் தாக்கினால் அவை பயந்து விடும். காண்டாமிருகம் ஒட்டகத்தை விட பலம் பொருந் தியது. அது ஒரு மோது மோதினால், ஒட்டகம் பயந்து ஓடி விடும்" என்றது. அந்தக் குரலைக் கேட்ட சீலமுகன் அது இரு க்ஷத்திரிய வாலிபர்களோடு இருந்து வரும் சொர்ணத்தினுடையது என்று தெரிந்து கொண்டான். ஆயினும் அப்போதைக்கு கொள்ளைக் காரர்களைத் தாக்காமல் தன் ஆட்களுடன் ஆரணியபுரத்திற்குப் செல்வதே சரி என நினைத்து அவன் தன் வீரர்களுடன் வெற்றிகரமாகப் பின் வாங்கினான்.

சொர்ணம் காண்டாமிருகத்தவர்களை எச்சரித்ததைக் கொள்ளைகாரத் தலைவன் கேட்டு விட்டான். அத



னால் அவன் சொர்ணம் ஏறி இருந்த மரத்தின் கீழே போய் நின்று, அதட்டும் குரலில், "யாரடா அது? மரத்தின் மேல் இருப்பது? எங்கள் ஒட்டகங்களைக் காண்டாமிருகங்கள் தாக்கி வீழ்த்த முடியும் என்று கூறி, எங்கள் எதிரிகளுக்கா உதவி புரிகிறாய்? வா! கீழே இறங்கி" என்று கத்தினான்.

சொர்ணமும் நடுநடுங்கியவாறே, "ஐயோ! என்னை ஒன்றும் செய்து விடாதீர்கள் ! இதோ, நானே கீழே இறங்கி வந்து விடுகிறேன்" என்று கூறிக்கொண்டே மரத்திலிருந்து இறங்கினான். பிறகு அவன் அத்தலைவனைக் கைகூப்பி வணங்கி, "ஐயா! என்னைக் கொன்று வீணாகப் பாவ மூட்டையை சுமக்காதீர்கள். என்னை உயிருடன் விட்டு விடுங்கள்" என்று கெஞ்சினான். கொள்ளைக்காரத் தலைவனோ, "இந்தக் கூழைக் கும்பிடு எல்லாம் போட வேண்டாம். நீ ஏன் இந்தக் காட்டிற்கு வந்தாய்? உனக்கு இங்கே என்ன வேலை?" என்று கேட்டான்.

சொர்ணமும், "நான் சகலகலா வல்லவன். எனக்கு சோதிடம், வாஸ்து சாஸ்திரம், மந்திர தந்திரம், மாந்திரீகம் என்று எல்லாம் தெரியும். இவ்வளவு திறமை இருந்தும் நகரில் எனக்கு வருமானமே இல்லை. அதனால் விக்கினேஸ்வரன் என்ற குருக்களுடன் சேர்ந்து இருவருமாக ஒரு மாய யானையை உருவாக்கினோம். ஆனால் இரண்டு க்ஷத்திரிய வாலிபர்கள் எங்களை அடித்து விரட்டவே, நாங்கள் பதுமபுரத்தை விட்டு ஓடி இங்கு வந்தோம். இங்கேயே ஒரு குடிசை போட்டுக் கொண்டு அதில் இருந்து வருகிறோம். எங்களை விரட்டிய க்ஷத்திரிய வாலிபர்கள் இருவரும் இங்கேயே சற்று தூரத்தில் தான் இருக்கிறார்கள்" என்றான்.

கொள்ளைக்காரத் தலைவனும், "நீ சொல்வது கேட்க சுவாரசியமாக இருக்கிறதே! சொன்னதெல்லாம் உண்மை தானா அல்லது உன் கைச் சரக்கா? க்ஷத்திரிய வாலிபர்கள் இங்கே என்ன செய்கிறார்கள்? தவமா?" என்று கிண்டலாகக் கேட்டான். சொர்ணமும், "அவர்களுக்குத் தவம் செய்ய வேண்டும் என்று தலையிலா எழுதி இருக்கிறது? க்ஷத்திரியர்களான தால் போர்க்கலை கற்றவர்கள். வாட் போர், மற்போர், வில், அம்பு எய்தல் என்பதில் எல்லாம் கை தேர்ந்

தவர்கள்" என்றான்.

கொள்ளைக்காரத் தலைவன் அது கேட்டு, ஏளனமாகச் சிரித்து, "சகல கலா வல்லவனே! நீ தான் அவர் களுக்கு குருவாக இருந்து போர்க் கலைகளை எல்லாம் அவர்களுக்குக் கற்றுக் கொடுத்தவன் போலக் கூறு கிறாயே! சரி, சரி. அது கிடக்கட்டும். நாங்கள் இந்த சோளக் கதிர்களை அறுத்துக் கொண்டு போவதை நீ சரி என்கிறாயா அல்லது தவறு என்கி றாயா?" என்று கேட்டான். சொர்ணம் சற்று யோசித்து, "ஐயா! நீங்கள் கேட்ட கேள்வி நியாய சாஸ்திரம் சம்மந்தப்பட்டது. நான் அதில் அவ்வளவாகத் தேர்ச்சி பெற்றவன் அல்லவே!" என்றான்.

அப்போது கொள்ளைக்காரத் தலைவன், "சரி, நீ சொல்ல வேண் டாம். அந்த க்ஷத்திரிய வாலிபர்கள் இருக்கும் இடத்தைக் காட்டு" என்றான். கொள்ளைக்காரத் தலை வன் அந்த இரு வாலிபர்களையும் கொல்ல விரும்புகிறான் என்பது சொர்ணத்திற்குத் தெரிந்து விட்டது. அதை எப்படித் தடுப்பது என்று யோசித்து, அவன் கொள்ளைக்காரத் தலைவனிடம், "ஐயா! நீங்கள் இங்கேயே இருங்கள். அவர்கள் தம் இருப்பிடத்தில் இருக்கிறார்களா என்று பார்த்து விட்டு வருகிறேன்" என்றான்.

கொள்ளைக்காரத் தலைவனோ, "இந்த வேலைத்தனம் எல்லாம் என்னிடம் பலிக்காது. சிந்து பாலை வனத்திலிருந்து, இந்தக் காட்டு வரை



உன்னைப் போல எவ்வளவு பேர் களைப் பார்த்திருக்கிறேன் தெரியுமா? உம், நட! அந்த இடத்தைக் காட்டு!" என்றான். சொர்ணத்திற்கு வேறு வழி யில்லை. அதனால் அத்தலைவனை அவன் அந்த வாலிபர்கள் இருக்கு மிடத்திற்கு அழைத்துச் சென்றான். அந்தக் குடிசையில் மூங்கில் தட்டிக் கதவு ஒரு கயிற்றால் கட்டப்பட்டிருந் தது. கொள்ளைக்காரத் தலைவன் அக் கயிற்றை அவிழ்த்துக் கதவைத் தள் ளிக் கொண்டு உள்ளே சென்றான்.

குடிசைக்குள் புலித்தோல், கரடித் தோல் என்று சில மிருகங்களின் தோல் கள் இருந்தன. ஒரு மூலையில் ஈட்டி களும், அம்புகளும் வைக்கப்பட்டு இருந்தன. அவன் அவற்றை எல் லாம் எடுத்துக் கொண்டு கிளம்பினான். அப்போது சொர்ணம், "ஐயா! என்னை விட்டு விடுங்கள். என்னை

எங்கே கொண்டு போகிறீர்கள்? என்னைக் கொன்று விடாதீர்கள் !" என்று உரக்கக் கூவினான். அவனது கூக்குரல் அப்போது ஆற்றில் குளித்து விட்டு வந்து கொண்டிருந்த அவனது நண்பனான விக்கினேசுவரக் குருக் களின் காதில் விழுந்தது. அதைக் கேட்டு அவன் ஆச்சரியப்பட்டான்.

மந்திர தந்திரங்களில் தேர்ந்தவ னான சொர்ணமா இப்படிக் கதறு கிறான்? அப்படியானால் அவன் பெரிய ஆபத்தில் தான் அகப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும். இதை க்ஷத்திரிய வாலிபர்களிடம் தெரிவிக் கலாம் என்று எண்ணி அவர்களது குடி சையை நோக்கி ஓடினான். ஆனால் அக்குடிசைக்குச் சற்று முன்னா லேயே அவன் நின்று விட்டான். ஏனெனில் குடிசையின் முன்னால் கொள்ளைக்காரத் தலைவன் ஒரு ஒட்டகத்தோடு நிற்பதையும், மற் றொருவன் தன் ஒட்டகத்தின் மீது ஈட்டிகளையும், அம்புகளையும் வைத்து, சொர்ணத்தையும் அதன் மீது ஏற்றுவதைக் கண்டான்.

விக்கினேசுவரன் சட்டென மறைந்து அக்குடிசையின் பின்புறத் திற்குச் சென்றான். அங்கு ஒரு மரக் கூண்டில் அந்த க்ஷத்திரிய வாலிபர்கள் பழக்கி வைக்கப்பட்டிருந்த சிங்கம் ஒன்று இருந்தது. அதனுடன் விக்கி னேசுவரனும், சொர்ணமும் நன்கு பழகியவர்கள். அதனால் அது அவர்கள் சொல்கிறபடி கேட்கும். அதனால் சொர்ணத்தைக் காக்க, அவன் கூண்டின் கதவைத் திறந்து சிங்கத்தை வெளியே விட்டான். அது வெளியே வந்ததும் பலமாகக் கர்ஜித்தது. உடனே அவன் அதைக் கொள்ளைக்காரன் இருக்கும் முன் புறம் போகும்படி சைகை செய்தான். சிங்கம் அக்குடிசையின் முன்புறம் வந்ததுமே சொர்ணம் உற்சாகத்துடன் அதைப்பார்த்து, "பரசு ! ஓடி வா !!" என்று தன்னருகே அழைத்தான்.

சிங்கமும் அவனது குரலைக் கேட்டு அவனருகே ஓடி வந்தது. அது ஒட்டகத்தைக் கண்டதும் அதன் மீது பாய்ந்தது. அது பயந்து ஓடவே, அதன் மீதிருந்த கொள்ளைக்காரன் நிலை தடுமாறிக் கீழே விழுந்தான். சிங்கம் அவன் மீது பாய்ந்து அவனது கழுத்தைக் கவ்வியது. (தொடரும்)



# சன்னியாசியின் சவடால்

ஒரு நாள் அனந்தன் மதிய உணவு உட்கொள்ள உட்கார்ந்த போது அவன் வீட்டுவாசலில் ஒரு சன்னியாசி நின்று, "சாதுவுக்கு உணவு அளியுங்கள்!", என்று குரல் கொடுத்தார். அனந்தனும் எழுந்து போய் அந்த சன்னியாசியை அழைத்து வந்தான். அவரை உட்கார வைத்துத் தன் மனைவியிடம் அவருக்கு இலை போட்டுப் பரிமாறும்படி அவன் கூறினான்.

சன்னியாசியும் சாப்பிடுகையில், "போன ஜென்மத்தில் நீங்கள் வீரசிம்ம மன்னரின் அமைச்சராக இருந்தீர்கள்!" என்றார். அப்போது அனந்தனின் மகள் சன்னியாசிக்கு நெய் பரிமாறவே, அவர் அவளை பார்த்து விட்டு, "இவள் முன் பிறப்பில் வீரசிம்ம மன்னரின் பட்டத்து ராணியாக இருந்தாள்" என்றார்.

அனந்தனுக்கு இந்த ஜோசியத்தில் எல்லாம் அவ்வளவாக நம்பிக்கை கிடையாது. அந்த சன்னியாசி இன்னும் எப்படியெல்லாம் அளக்கிறார் என்று பார்க்க விரும்பினான். அதனால் சிரித்தவாறே அவன், "நான் முன் பிறப்பில் அமைச்சன். என் மகள் முன் பிறப்பில் பட்டத்து ராணி. கேட்க சந்தோஷமாக இருக்கிறது. ஆமாம். முன் பிறப்பில் வீரசிம்ம மன்னராக இருந்தவர் இப்பிறப்பில் எங்கே இருக்கிறார் என்று தங்கள் ஞான திருஷ்டியால் அறிந்து கூறுங்கள்", என்று குத்தலாகக் கேட்டான்.

சன்னியாசியும், "முன் பிறப்பில் வீரசிம்ம மன்னராக இருந்தவன் நான் தான்" எனவே அனந்தனும், "ஓகோ! இரும். செங்கோலை எடுத்து வந்து உமக்குத் தகுந்த மரியாதை செய்கிறேன். ஜோசியமா சொல்கிறாய்! வெறும் அளப்பு!" எனக்கூறி நீண்ட மூங்கில் கழியை எடுத்து வரவே சன்னியாசி பயந்து எடுத்தார் ஓட்டம்!



**ஒரு நாகரீகத்தின் உயரிய கட்டங்கள், பரம்பரை பரம்பரையாக, உண்மையைக் காண ஆய்வு**

# 12. மிக உயரிய இடம்



சோமநாதர் தம் முன் கூடிய சிறுவர், சிறுமியரைப் பார்த்து, "அடேயப்பா...! என் கதையைக் கேட்க உங்களுக்கெல்லாம் இவ்வளவு ஆவலா? சரி, இன்று ஒரு சிறுவன் மிக உயர்ந்த இடத்தைப் பிடித்த கதையைக் கூறுகிறேன்" என்றார்.

அப்போது ஒரு சிறுவன், "அவன் சாதாரணக் குடும்பத்தைச் சேர்ந்தவனா? அல்லது பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவனா?" என்று கேட்கவே, சோமநாதரும், "அவன் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவன். அதுவும் அரச குடும்பத்தைச் சேர்ந்தவன்" என்றார். உடனே அச்சிறுவன், "அரச குடும்பத்தைச் சேர்ந்தவன் என்றாலே உயரிய இடத்தில் தானே இருப்பான். அதை விட உயரிய இடம் இருக்கிறதா?" என்று கேட்டான்.

அப்போது சோமநாதர், "நான் சொல்லப் போகும் கதையை கவனமாகக் கேட்டால், அந்த உயரிய இடம் எது என்று உங்களுக்குத் தெரியும்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தார்.

வடமதுரையை ஆண்டு வந்த உத்தானபாதனுக்கு இரண்டு மனைவிகள். மூத்தவள் பெயர் சுநீதி. இளையவள் சுருசி. மன்னன் சுருசியைப் பெரிதும் விரும்பினான். அவள் பேச்சிற்கு மறு பேச்சு பேசத் துணிய மாட்டான். சுநீதி பொறுமை மிக்கவள். கடவுள் பக்தி கொண்டவள். சுருசியோ, தான் என்ற அகங்காரம் கொண்டு தன் கணவனைத் தன் இஷ்டப்படி ஆட்டி வைத்து வந்தாள்.

சுநீதியின் மகன் துருவன். சுருசியின் மகன் உத்தமன். சுருசி துருவனை வெறுத்து, உத்தமனைச்



சீராட்டியும், பாராட்டியும் வளர்த்து வந்தாள்.

ஒரு நாள் சிறுவர்களாகிய துருவனும், உத்தமனும் விளையாடி விட்டுத் தம் தந்தையைக் காண சுருசியின் மாளிகைக்குச் சென்றார்கள். அங்கு உத்தானபாதன் ஒரு ஆசனத்தில் அமர்ந்திருக்க, சுருசி அவன் பக்கத்தில் நின்று கொண்டிருந்தாள். உத்தமன் ஓடிப்போய்த் தன் தந்தையின் மடியில் ஒரு பக்கமாக உட்கார்ந்தான். துருவனும் தன் தந்தையருகே சென்று, அவனது மடியில் உட்கார முயன்றான்.

சுருசியோ ஆத்திரம் கொண்டு துருவ்னின் கையைப் பிடித்து அப்பால் இழுத்து, "அடே...! நீ மன்னரின் மடியில் உட்கார வேண்டுமென்றால் நீ என் மகனாகப் பிறந்திருக்க வேண்டும். அப்போது தான் உனக்கு இந்த உயரிய இடம் கிடைக்கும். போ அப்பால்" என்று கூறி விரட்டினாள். துருவன் அழுது கொண்டே தன் தாயிடம் போய் தன்னை சித்தி அவமானப்படுத்தியதைக் கூறினான். சுநீதியும் அவனுக்கு ஆறுதல் கூறி, "நீ கடவுளின் மீது நம்பிக்கை வைத்து அவரை பக்தி சிரத்தையுடன் வழிபட்டு வா! அவர் உனக்கு இதை விட மிக மிக உயரிய இடத்தை அளிப்பார்" என்று தேற்றினாள்.

அப்போது முதல் துருவனின் மனதில் கடவுளை எவ்வாறு வழிபட்டு மிக உயரிய இடத்தை அடைவது என்ற எண்ணமே தலைதூக்கி நின்றது.



அவன் தன் தாயிடம் போய், "அம்மா...! நான் பகவான் நாராயணனைக் குறித்துத் தவம் செய்து எனக்கு மிக உயரிய இடம் அளிக்குமாறு அவரிடம் வரம் கேட்கப் போகிறேன். தவம் புரிய ஏற்ற இடம் இமயமலை. எனவே அங்கு செல்கிறேன்" என்றான். சுநீதியும், "உன் முடிவு வரவேற்கத் தக்கதே. என்றாலும், தவம் புரிதல் என்பது மிகக் கடினமான விஷயம். இமயமலையின் பனி, குளிர் ஆகியவற்றை எல்லாம் தாங்கிக் கொள்ள வேண்டும். பசி, தாகம் என்பனவற்றை எல்லாம் அடக்கிக் கொள்ள வேண்டும். இவற்றை எல்லாம் சிறுவனான உன்னால் செய்ய



முடியுமா? நன்றாக யோசித்துப் பார்" என்றாள்.

துருவனும், "நன்கு யோசித்து விட்டேனம்மா! எனக்கு நாரத முனிவரின் ஆசிகளும், உபதேசமும் கிடைத்துள்ளன. நீயும், உன் ஆசிகளை அளித்து எனக்கு விடை கொடுத்து அனுப்பினால் நான் தவம் செய்து, பகவானின் அருளைப் பெற்று மிக உயரிய இடத்தை நிச்சயமாக அடைந்து விடுவேன்" என்றான். சுநீதியும், "சரி. நீ உன் விருப்பப் படியே செய். என் பரிபூரண ஆசிகளை உனக்கு அளிக்கிறேன்" என்று கூறித் தன் மகனைத் தவம் புரிய அனுப்பி வைத்தாள்.

துருவனும் இமயமலைக்குச் சென்று ஓரிடத்தில் அமர்ந்து தவம் செய்யலானான். இமயமலைக் காடுகளில் திரிந்த பயங்கரக் கொடிய மிருகங்களைக் கண்டு அவன் பயந்து விடவில்லை. வெயில், மழை, பனி, குளிர் என்பனவற்றைப் பொருட்படுத்தவில்லை. நாரத முனிவர் உபதேசித்த நாராயண மந்திரத்தை உச்சரித்தவாறே தவம் புரியலானான்.

வருடங்கள் உருண்டோடின. துருவன் சற்றும் மனம் தளராமல் தவம் புரிந்து கொண்டே இருந்தான். இது கண்டு மனம் இரங்கி பகவான் நாராயணன் அவன் முன் தோன்றி, "துருவா...! உன் தவத்தைக் கண்டு மகிழ்ந்தேன். உனக்கு நீண்ட ஆயுளை அளிப்பதோடு நீ விரும்பியபடி யாருமே அடைய முடியாத மிக உயரிய இடத்தையும் உனக்கு அளிக்கிறேன். நீ வானில் வட திசையில் ஒளி வீசும் துருவ நட்சத்திரமாக என்றென்றும் விளங்கி வருவாய்!" என்ற வரத்தை அளித்துவிட்டு மறைந்தார்.

துருவன் அவன் விரும்பிய மிக உயரிய இடத்தை பக்தியாலும், இடைவிடாத கடுந்தவத்தாலும் அடைந்தேவிட்டான். 'பக்தி இருந்தால் முக்தி பெறலாம்' என்பது அறிஞர்கள் அடிக்கடி கூறி வருவது. துருவன் அதை நினைவில் கொண்டு தன் சித்தி செய்த அவமானத்தைப் போக்கிக் கொண்டு அசைக்க முடியாத நிலையான உயரிய இடத்தை அடைந்துவிட்டது மாபெரும் சாதனைதானே!

இக்கதையை சோமநாதர் கூறி, "பகவானிடம் நீண்ட ஆயுள் என்ற வரத்தையும் பெற்ற துருவன் நாட்

டிற்குத் திரும்பி வந்தான். உத்தான பாதனுக்கு வயோதிகப் பருவம் வந்துவிட்டதால் அவன் நாட்டை துருவனிடம் ஒப்படைத்து விட்டு வானப்பிரஸ்தாசிரமத்தை மேற் கொண்டு காட்டிற்குச் சென்று விட்டான்.

உத்தமனைப் போரில் கொன்ற யட்சர்களைதுருவன்தோற் கடித்தான். அவர்களுடைய மன்னனான குபேரன் துருவனுடன் சமாதானம் செய்து கொண்டு பல வரங்களையும் அளித் தான். இதிலிருந்து துருவன் தனது கடமைகளைச் செவ்வனே செய்து வந்தான் என்பது விளங்குகிறது அல்லவா? ஒருவன் அகங்காரத்தால் ஏதாவது செய்தால் அதற்கு மாற்றாக நடக்க பகவான் துணை புரிவான் என்பதை சுருசி, துருவன் ஆகிய இருவரின் வாயிலாகத் தெரிந்து கொண்டோம்.

உயர் நிலையை அடையும் வரத்தைப் பெற்ற போதிலும் துருவன் தன் கடமையை மறக்கவில்லை. எந் நிலையிலும் ஒருவன் தான் செய்ய வேண்டிய கடமைகளை மறந்துவிடக் கூடாது என்பதை துருவன் யாவ ருக்கும் உணர்த்தி இருக்கிறான். கடவுளை நம்பினோர் கைவிடப் படார் என்பது இதிலிருந்து தெரிகிற தல்லவா?" என்றார்.

சியாமளாவும், "தாத்தா...! இன்று பல நல்ல விஷயங்களைத் தெரிந்து கொண்டோம்" எனவே, சோம நாதரும், "பகவான் தன் பக்தர்களை ஒரு நாளும் கைவிட்டதில்லை. துருவனைப் போல மற்றொரு சிறு வனான தன் பக்தனை அவர் காத்திருக்கிறார். அவன் யார் தெரி யுமா?" என்று கேட்டார். அப்போது சேகர், "நீங்கள் மார்க்கண்டேயர் கதையைக் கூறியபோது அவன் பெயரைக் குறிப்பிட்டுக் கூறினீர்கள். பிரகலாதன் தானே அவன்?" என்று கேட்டான்.

சோமநாதரும், "ஆமாம்! ராட்சஸ மன்னனின் மகன் பிரகலாதன் என்பவன். அவனுக்குக் கடவுளின் அனுக்கிரகம் எவ்வாறு கிடைத்தது என்பதை இன்னொரு நாள் கூறு கிறேன்" என்றார்.

*(தொடரும்)*



# அவனுக்கே வேலை

மிராசுதாரர் முத்தப்பர் தன் தோட்டத்தில் வேலை செய்ய ஒருவனைத் தேர்ந்தெடுக்க விரும்பினார். அவரது நண்பர் ஒருவர் கேசவன் என்பவனையும், மாதவன் என்பவனையும் அனுப்பி அவர்களில் யாரையாவது ஒருவனைத் தேர்ந்தெடுக்கும்படிக் கூறினார். முத்தப்பரும் தம்மைக் காண வந்த அவ்விரு வரிடமும், "நீங்கள் இருவரும் என் தோட்டத்திற்குப் போய் இன்று வேலை செய்யுங்கள். உங்கள் வேலைகளைப் பார்த்து விட்டு யாரை வேலைக்கு வைத்துக் கொள்வது என்று கூறுகிறேன். தோட்டத்து ஓலைக் கொட்டகையில் வேலைக்கு வேண்டிய சாமான்கள் உள்ளன", என்று கூறி அவர்களைத் தம் தோட்டத்திற்கு அனுப்பினார்.

உச்சி வேளையின் போது முத்தப்பர் அந்த இருவரும் எப்படி வேலை செய் கிறார்கள் என்று காணச் சென்றார். அவர் தோட்டத்திற்குள் வருவதைக் கண்டதுமே கேசவன் தான் வேலை செய்வதை விட்டு ஓடோடி வந்து அவரைத் தோட்டத்து ஓலைக் கொட்டகைக்கு அழைத்துப் போய் அங்கிருந்த நாற்காலியில் உட்கார வைத்தான். பிறகு தாகத்திற்கு இளநீர் வெட்டிக் கொண்டு வந்து கொடுத்தான். மாதவனோ அவர் வந்தது பற்றிக் கவலைப் படாமல் தன் வேலையில் கவனமாக இருந்தான்.

பொழுது சாய்ந்ததும் இருவரும் முத்தப்பரைக் கண்டார்கள். அப்போது அவர் தான் மாதவனை வேலைக்கு வைத்துக் கொள்ளப் போவதாகக் கூறினார். அது கேட்டுக் கேசவன், "நீங்கள் தோட்டத்திற்கு வந்தபோது அவன் உங்களை லட்சியமே செய்யவில்லையே. நான் தானே உங்களை வரவேற்று உபசரித்தேன்", என்றான்.

முத்தப்பரும், "நீ என்னை சந்தோஷப்படுத்த உன் வேலையை நிறுத்தி விட்டு வந்தாய். அவனோ தன் வேலையில் கண்ணும் கருத்துமாக இருந்தான். அதனால் தான் அவனை வேலைக்கு வைத்துக் கொள்கிறேன்", என்றார்.



அம்புலிமாமா சிறப்புப்பகுதி

# இருபதாம் நூற்றாண்டில் இந்தியா

## சுய ஆட்சியிலிருந்து சுதந்திரக் குடியரசு வரை — 1923-1950

பொதுக் கூட்டங்களில் மூவர்ணக் கொடிகளை எடுத்துச் செல்வதை அரசாங்கம் தடை செய்யவே, அத்தடையை மீறி நாக்பூரில் 1923ல் மே மாதம் காங்கிரஸ்காரர்களின் ஊர்வலம் சென்றது. இது தடியடியால் கலைக்கப்பட்டு, பலர் கைது செய்யப்படவே, ஜூலை 18 கொடி நாளாக நாடு முழுவதும் நடத்தப்பட்டது. இதன் பின் அத்தடையை அரசாங்கம் விலக்கியது.

டில்லியில் மௌலானா அபுல் கலாம் ஆஜாதின் தலைமையில் கூடிய காங்கிரஸ் சிறப்பு மகாசபை தனிப்பட்ட முறையில் காங்கிரஸ்காரர்கள் சட்டமன்றத் தேர்தல்களில் வேட்பாளர்களாக நிற்க அனுமதித்தது. அரசாங்கத்தின் எல்லா வித அடக்கு முறைகளையும் எதிர்க்க அஹிம்சை முறை சத்தியா கிரகம் ஒன்று தான் வழி எனவும் அப்போது தீர்மானிக்கப்பட்டது.



மௌலானா ஆஜாத்

சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ள பல பிரிவுகளிடையே ஒற்றுமை காண வேண்டுமென 1924ல் உணரப்பட்டது. அப்போது காந்திஜீ 'சுவராஜ் கட்சி' என்ற பிரிவுடன் பேச்சு வார்த்தை நடத்தினார். ஒத்துழையாமை இயக்கத்தைச் சற்று நிறுத்தி வைப்பது என முடிவு செய்யப்பட்டது.

பெல்காம் காங்கிரஸ் மகாசபையில் காந்திஜீ ஒத்துழையாமையும், சட்ட மறுப்பு இயக்கமும் நற்பலன்களை அளிக்கும் கற்பக மரத்தின் இரு கிளைகள் போன்றவை எனக் கூறினார். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு ஆகியவற்றிற்காகப் பாடுபடுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

# முழு சுதந்திரமே! சற்றும் குறைந்தது அல்ல!!


சரோஜினி நாயுடு

காங்கிரஸ் மகா சபையின் 40வது பொதுக் கூட்டம் 1925 டிசம்பர் 26ல் கூடிய போது அதன் தலைவி சரோஜினி தேவியார் சுதந்திரப் போராட்டத்தில் பயத்திற்கும், சந்தேகங்களுக்கும் இடமில்லை எனக் கூறி யாவருக்கும் ஊக்கமும், உற்சாகமும் அளித்தார்.

காங்கிரஸ் மகாசபையின் 1926 கூட்டத்தின் கிளை போல அனைத்திந்தியக் கல்லூரி மாணவர்களின் மாநாடு நடந்து அதில் மாணவர்கள் எல்லா அரசாங்கக் கல்லூரிகளையும் பகிஷ்கரிப்பது என்ற முடிவு எடுக்கப்பட்டது. இக்கல்லூரிகளை விட்டு வெளியேறி ஒத்துழையாமை இயக்கத்தில் கலந்து கொண்ட மாணவர்களுக்காக புதிய பள்ளிகளும், கல்லூரிகளும் ஆரம்பிப்பதென முடிவு செய்யப்பட்டது.

சென்னையில் 1927ல் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் 'இந்தியாவிற்கு முழு சுதந்திரம் கிடைக்கும் வரை நாம் ஓய மாட்டோம்' என்று ஜவஹர்லால் நேரு கொண்டு வந்த தீர்மானம் ஏற்கப்பட்டது. இவ்வாறு கோரிய அதிகாரப் பூர்வத் தீர்மானம் முதல் தடவையாம்.

மிண்டோ- மார்லி சீர்திருத்தங்கள் நடைமுறைக்குக் கொண்டு வந்ததை ஆய்வு செய்ய வந்த சைமன் கமிஷனை பகிஷ்கரிக்கும் படியும் இம்மாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

டில்லியில் 1928ல் கூடிய அனைத்துக் கட்சிகளின் கூட்டம் சுதந்திரமான, பொறுப்புள்ள அரசாங்கத்தை நாட்டில் அமைக்க அரசியல் நிர்ணயச் சட்டம் வேண்டும் என்று தீர்மானித்தது. இதற்காக மோதிலால் நேரு தலைமையில் ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. ஜின்னாவின் தலைமையிலான முஸ்லிம் லீக்கைத் தவிர மற்ற எல்லாக் கட்சிகளும் ஏற்றன. முஸ்லிம் லீக் முஸ்லிம்களுக்குத் தனித்தொகுதிகள் சில இருக்க வேண்டுமெனக் கோரியது. இதனை மற்ற கட்சிகள் நிராகரித்தன.


ஜின்னா

சில காங்கிரஸ்காரர்கள் இந்தியா 'குடியேற்ற நாடு' என்ற அந்தஸ்தைப் பெறுவதோடு திருப்தி அடைய வேண்டும் என்பதை எதிர்த்தார்கள். காந்திஜீ போன்ற முதுபெரும் தலைவர்கள் இதற்கு சம்மதித்த போதிலும், இளம் தலைவர்களான ஜவஹர்லால் நேருவும், சுபாஷ் சந்திர போஸும் முழு சுதந்திரமே வேண்டும் என்றார்கள்.

சுதந்திரப் போராட்டம் 1928ல் புதிய திருப்புமுனையைக் கண்டது. குஜராத்தில் பர்டோலியின் குடியானவர்கள் வல்லப்பாய் படேலின் தலைமையில் வரிகொடா இயக்கத்தில் இறங்கினார்கள். வரி வசூலிப்போருக்கு உணவும், வாகன வசதியும் கிடைக்காமல் செய்து தவிக்க விட்டார்கள். அரசாங்கம் குடியானவர்களின் வயல்களையும், சாதனங்களையும் பறிமுதல் செய்தது. அரசாங்கம் வரிவிதிப்பு முறையைப் பரிசீலித்துக் குறைப்பதாக வாக்களித்த பின்னரே இந்த இயக்கம் நிறுத்தப்பட்டது.



வல்லபபாய் படேல்

லாகூரில் 1929ல் நடந்த 44வது இந்திய தேசிய காங்கிரஸ் மாநாட்டில் ஜவாஹர்லால் நேரு தலைமையில் இந்தியா சுதந்திர நாடு என அறிவிக்கப்பட்டு மூவர்ணக் கொடி ஏற்றப்பட்டது.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலிருந்து நாடு சுதந்திரம் அடைய விரும்புவதாயும், பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்திலிருந்து விலக வேண்டும் என்றும் அவர் சூளுரை கூறினார். ஒவ்வொரு ஆண்டிலும் ஜனவரி 26ஐ சுதந்திர தினமாகவும் கொண்டாடத் தீர்மானிக்கப்பட்டது.

## உலகின் மற்ற பகுதிகளில்...



- ஜான் லோகிபெய்ர்ட் 1925 அக்டோபர் 2ல் அசையும் படங்களை சற்றுத் தூரத்திலிருந்து ஒரு திரையில் விழச் செய்து தொலைக்காட்சி என்பதனை ஆரம்பித்து வைத்தார்.



- விமானப் பறத்தலில் சார்ல்ஸ் லிண்ட்பர்க் தன் விமானமான 'ஸ்பிரிட் ஆஃப் சென்ட்லூயி' யில் நியூயார்க்கின் லாங்க் ஐலண்டில் இருந்து பாரிஸ் வரையான 3600 மைல் தூரத்தைத் தனியாகவே எங்கும் நிற்காமல் 33 1/2 மணி நேரம் 1927 மே 21ல் பறந்து அற்புதத்தை நிகழ்த்தினார்.

# சட்டமறுப்பு இயக்கம்

சபர்மதியில் 1930ல் கூடிய காங்கிரஸ் செயற்குழு சட்ட மறியல் இயக்கத்தை ஆரம்பிப்பது என்றும் இதற்கு காந்திஜீ தலைமை தாங்க வேண்டுமென்றும் தீர்மானித்தது. அவர் உப்பு சட்டத்தை எதிர்த்தும் மறியல் செய்வதை ஏற்றது.



அதன்படி அவர் மார்ச் 12ல் 78 தொண்டர்களுடன் சபர்மதியிலிருந்து 200 மைல் தூரத்திலுள்ள தண்டி வரை நடந்து சென்றார். 24 நாட்கள் நடந்த பின் ஏப்ரல் 6ல் அவ்வூரை அடைந்து அவரும், மற்ற தொண்டர்களும் சட்டத்தை மீறி கடல் நீரை எடுத்து உப்புக் காய்ச்சினார்கள். ஒரு மாதத்திற்குப் பிறகு அவர் கைது செய்யப் பட்டார்.



லண்டனில் நவம்பர் 12ல் நடந்த முதலாவது வட்ட மேஜை மாநாட்டை காங்கிரஸ் புறக்கணித்தது. முஸ்லிம் லீக் சார்பில் சென்ற ஜின்னா எல்லா சட்டசபைகளிலும் முஸ்லிம்களுக்கு மூன்றில் ஒரு பங்கு பிரதிநிதித்துவம் வேண்டுமென வலியுறுத்தினார். ஹிந்து மகாசபை இக்கோரிக்கையை எதிர்த்தது.

காந்திஜீக்கும் வைஸ்ராய் இர்வின்பிரபுவுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கைப்படி சட்டமறுப்பு இயக்கம் நிறுத்தப்பட்டது. அரசாங்கம் எல்லா வித அடக்குமுறைகளையும் நிறுத்தி விடுவதாக வாக்களித்தது.

இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டிற்கு காந்திஜீ 1931ல் பிரதிநிதியாக லண்டனுக்குச் சென்றார். சமூக சீர்திருத்தங்கள் செய்து முடிந்த பிறகே அரசியல் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டு, சுய ஆட்சி வழங்கப்படும் என்று அரசாங்கம் கூறியது.

காந்திஜீயோ, முதலில் அரசியல் சீர்திருத்தம் வேண்டும் என்றும் பிறகே சமூக சீர்திருத்தங்களைப் பற்றி

நினைக்க வேண்டும் என்றும் கூறினார்.

புதிய வைஸ்ராய் 1932ல் நான்கு புதிய அவசரச் சட்டங்களைப் பிறப் பித்தார். இதன்படி எந்த இயக்கமும் எதிர்ப்பும், ஆர்ப்பாட்டமும் செய்வது தடுக்கப்பட்டது. இது காந்தி-இர்வின் உடன்படிக்கைக்கு முரணானது.

காங்கிரஸ் மீண்டும் சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்கப் போவதாக அறிவித்தது. காங்கிரஸ் கட்சி சட்ட விரோதமானது என்று அரசாங்கத்தால் அறிவிக்கப்பட்டது. சுமார் 400 காங் கிரஸ்காரர்கள் நாடு முழுவதிலுமாகக் கைது செய்யப்பட்டார்கள்.



- இந்திய இயல்பியல் மேதை சி.வி. ராமனுக்கு இயல்பியல் துறைக்கான நோபல் பரிசு 1930ல் அவரது 'ராமன் எஃபெக்ட்' டிற்காக அளிக்கப்பட்டது. ஆசியாவிலேயே முதலாவதாக இத்துறையில் பரிசு பெற்ற பெருமை இவருக்கு கிடைத்தது.

# உலகின் மற்ற பகுதிகளில்...

- 'மிக்கி மௌஸ்' ஒலியுடன் கூடிய திரைக் கார்ட்டூன் படமாக 1928 செப்டம்பரில் நியூயார்க்கில் திரையிடப்பட்டது. இதற்கு முன் ஒலி இல்லாது தயாரிக்கப்பட்ட இதன் இரு திரைப்படங்களை யாரும் வாங்க முன் வரவில்லை.



- காயங்களையும், வெட்டு, சிராய்ப்புகளையும் நன்கு குணப் படுத்தும் பென்சிலினை 1928ல் அலெக்ஸாண்டர் ஃப்ளெமிங் கண்டுபிடித்தார்.



- 'அலைஸ் இன் ஒண்டர் லாண்ட்' என்ற புத்தகத்தின் மூலக் கையெழுத்துப் பிரதி 1928ல் 15,400 டாலர்களுக்கு விலை போயிற்று.

# மாகாணங்களில் முதலாவது அமைச்சரவைகள்

காந்திஜீ சிறையில் 1933 மே-யில் உண்ணா விரதத்தை மேற்கொண்டார். இது 21 நாட்களுக்குத் தொடர்ந்தது. பிறகு சட்டமறுப்பு இயக்கத்தை அவர் நிறுத்தி வைத்தார்.

இது இரண்டாவது முறையாகும். அவர் விடுதலை செய்யப்பட்டதும், தாம் தாழ்த்தப்பட்டோரை, அதாவது ஹரிஜனங்களை உயர்த்தப் பாடுபடப் போவதாக அறிவித்தார். தாழ்த்தப் பட்டோருக்கு அவரிட்ட பெயர் 'ஹரிஜன்'.


ஜெயப்பிரகாஷ் நாராயணன்

பாட்னாவில் மே 1934ல் காங்கிரஸ் மாநாடு நடந்த போது, தம்மை சோஷலிஸ்ட்கள் எனக் கூறிக் கொண்டு சில காங் கிரஸ்காரர்கள் தனியாகக் கூடி 'காங்கிரஸ் சோஷ லிஸ்ட்'கள் என்ற பிரிவை அமைத் தார்கள். காங்கிரஸின் இந்த உட் பிரிவிற்கு ஜெயப்பிரகாஷ் நாராயணன் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். இப்பிரிவு இந்தியா விற்கு முழு சுதந்திரம் வேண்டும் என்றும், அதற்கான அரசியல் நிர்ணய சபை அமைக்க வேண்டுமென்றும், சோஷலிஸ அடிப் படையில் சமுதாயம் அமைய வேண்டுமென்றும் தீர்மானங் களை நிறை வேற்றியது.

காங்கிரஸ் தனது 48வது மாநாட்டை பம்பாயில் அக்டோபரில் நடத்திய போது காந்திஜீ தான் கட்சியிலிருந்து விலகுவதாக அறிவித்தார். நவம்பரில் மத்திய சட்டசபைக்கு நடந்த தேர்தலில் காங்கிரஸ் பெரும்பான்மை பெற்றது.

லக்னோவில் 1936ல் கூடிய காங் கிரஸ் மாநாட்டிற்குத் தலைமை வகித்த ஜவாஹர்லால் நேரு காங்கிரசில் தொழிற் சங்கங்களையும், விவசாயிகள் சங்கங்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று கூறினார். இக்கூட்டத் திற்கு இடதுசாரிகள் நிறைய பேர் வந்திருந்தனர்.

சோஷலிஸ்ட் இளைஞர்களான ஜெயப்பிரகாச நாராயணனும், அச்சுதப் பட்டவர்த்தனும் காங்கிரஸ் செயற்குழு வில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். மாணவர்களை சுதந்திரப் போராட்டத் தில் ஈடுபடுத்த அனைத்திந்திய மாணவர் அமைப்பு ஏற்படுத்தப் பட்டது.

காங்கிரஸ் 1937ல் தான் பெரும் பான்மை பெற்ற மாகாணங்களில் அமைச்சரவை களை அமைத் தது. 1585 இடங்களில் 715ஐ காங் கிரஸ் கைப் பற்றியது. 123 இடங் களை முஸ் லிம் லீக் பெற்றது. ஐக்கிய


விஜயலட்சுமி பண்டிட்

மாகாணத்தில் ஜவா ஹர்லால் நேருவின் சகோதரி விஜயலட்சுமி பண்டிட் முத லாவது பெண் அமைச்சராகி சுகாதாரத் துறையை ஏற்றார்.

காந்திஜீ வார்தாவில் ஒரு மாநாட் டிற்குத் தலைமை வகித்து 'அடிப்படைக் கல்வித் திட்டம்' என்ற புதிய கல்வித் திட்டத்தை நாட்டின் முன் வைத்தார். இது தொழில் அடிப்படையில் அமைந் தது. இந்தியப் பண்பாட்டை ஒட்டியது. இத்திட்டத்தின் கீழ் முதலாவது பள்ளிக் கூடம் வார்தாவில் ஆரம்பிக்கப்பட்டது.

சுதந்திரப் போராட்டம் இந்தியா விலுள்ள 500க்கும் மேற்பட்ட சமஸ் தானங்களில் பரவியது. அங்கெல்லாம் காங்கிரஸார் இதற்கான சிறு குழுக்களை அமைத்தனர். சில சமஸ்தான மன்னர் கள் இவற்றை அங்கீகரிக்க மறுத்தனர். ஏனெனில் அவர்கள் பிரிட்டிஷாருக்கு விசுவாசமாக இருப்பவர்கள். மைசூர், திருவாங்கூர் போன்ற சமஸ்தானங்கள் காங்கிரஸ்காரர்கள் மீது கடும் நட வடிக்கைகளை எடுக்கலாயின.

1938ல் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் சமஸ்தானங்களின் இந்த நடவடிக்கை களுக்குக் கண்டனம் தெரிவிக்கப் பட்டது. ஜவாஹர்லால் நேரு சமஸ்தான காங்கிரஸ் அமைப்புகளுக்கு முழு ஆதரவு அளிக்கக் கோரினார்.

- எல்லா ஹிந்துக்களும் கோவி லுக்குள் தடை இல்லாமல் செல்ல லாம் என்ற காங்கிரஸின் விருப்பம் 1933 ஜனவரி 8ல் நிறைவேறி சட்டம் வந்ததால் அந்த நாள் வரலாற்றுச் சிறப்பு மிக்க நாள்.

## உலகின் மற்ற பகுதிகளில்...



- ஜெர்மன் ஆகாயக் கப்பல் ஜெப்ளின் உலகை 21 நாட் களில் 1929ல் சுற்றி வந்தது.
- அமெரிக்க வானவியல் விஞ்ஞானி கிளைட்டாம்போ 1930ல் ப்ளூட்டோ என்ற கிரகம் இருப்பதைக் கண்டுபிடித்தார்.
- டான்பிராட்மென் ஒரே இன் னிங்க்ஸில் 415 நிமிடங்களில் 452 ரன்களை 1930ல் நியூ சௌத்வேல்ஸிற்காக க்வீன் ஸ்லாண்டிற்கு எதிராக ஆடி எடுத்தார். இதில் 49 பௌண் டரிகளை அடித்து உலக சாதனை புரிந்தார்.

- 'ஹாப்பி பர்த்டே டூ யூ' என்ற பாட்டை 1924ல் கிளாய்டன் எஃப்சம்மி இயற்றினார்.
- இங்கிலீஷ் கால்வாயை 1924ல் முதலில் கடந்த பெண்மணி கெர்ட்டுட் டோல்.

# காங்கிரஸ் தலைவர் பதவிக்குப் போட்டி!

காங்கிரஸில் முதல் முறையாகக் காங்கிரஸ் தலைவர் பதவிக்குப் போட்டி ஏற்பட்டது. காந்திஜீ தலைமையில் வலது சாரிகள் பட்டாபி சீதாராமய்யாவைத் தலைமைப் பதவிக்கு நிறுத்தினர். சுபாஷ் சந்திர போஸ் இடது சாரிகளின் ஆதரவுடன் தலைவர் பதவிக்குப் போட்டி போட்டார். போஸ் பெரும்பான்மை பெற்று தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படவே காந்திஜீ தமக்குத் தோல்வி ஏற்பட்டதாக அறிவித்தார்.



சுபாஷ் சந்திர போஸ்

திரிபுராவில் 1939 மார்ச்சில் 52வது காங்கிரஸ் மாநாடு நடக்கவே அதில் காந்திஜீயின் தலைமையில் நம்பிக்கை இருப்பதாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. காங்கிரஸ் செயற்குழுவை அமைக்க அவருக்கு அதிகாரமும் அளிக்கப்பட்டது. இதை போஸின் மீது நம்பிக்கை இல்லை என்று தெரிவிப்பதாக அவரது ஆதரவாளர்கள் கருதினார்கள். தன்னால் சுயேச்சையாகச் செயல்பட முடியாது என்பதைக் கண்டுகொண்ட போஸ் தலைவர் பதவியை ராஜினாமா செய்துவிட்டு ஃபார்வர்ட் ப்ளாக் என்ற கட்சியை ஆரம்பித்தார்.

செப்டம்பரில் இரண்டாவது உலகப்போர் ஆரம்பமானதும் வைஸ்ராய் எல்லா மாகாண அமைச்சரவைகளையும் பதவி நீக்கம் செய்தார். போரில் இந்தியா பிரிட்டனை ஆதரிக்கும் என்று வானொலியில் அறிவிக்கப்பட்டது. காங்கிரஸ் செயற்குழுவோ இந்தியாவிற்கு சுதந்திரம் அளிப்பதாயும், போரில் விளையும் பாதிப்புகளைச் சரிக்கட்டுவதாயும் வாக்குறுதி அளிக்க வேண்டுமென்றும் கோரியது.

போர் தொடங்கி ஓராண்டு கழியவே காங்கிரஸ் இடைக்கால அரசாங்கம் அமைக்கப்பட வேண்டும் என்று கோரியது. அதை அமைக்காவிட்டால் சட்டமறுப்பு இயக்கம் நடத்தப்படும் எனவும் அறிவித்தது. ஆயினும் காந்திஜீயும், ஜவாஹர்லால் நேருவும் பிரிட்டன் போரில் ஈடுபட்டிருக்கையில் சட்டமறுப்பு இயக்கத்தை நடத்தக் கூடாதெனக் கருதினார்கள்.

வைஸ்ராய் லார்ட் லின்லித்கோ போர் முடிந்ததும் பிரதிநிதித்துவம் வாய்ந்த ஒரு அரசியல் நிர்ணய சபை அமைக்கப்படும் என வாக்குறுதி அளித்தார். பம்பாயில் செப்டம்பரில் கூடிய காங்கிரஸ் செயற்குழு பொதுமக்கள் இயக்கமாக இல்லாமல் தனிநபர் சத்தியாகிரகமாக சட்டமறுப்பைச் செய்யலாம் என்ற காந்திஜீ யின் யோசனையை ஏற்றது. அவர் தான்



வினோபா பாவே

அதற்கான நபர்களைத் தேர்ந்தெடுப்பார் என்பதற்கும் இசைந்தது. காந்திஜீ முதலாவது சத்தியாக்கிரகியாக விநோபா பாபாவேயைத் தேர்ந்தெடுத்தனர். அவர் வார்தாவிற்கு அருகேயுள்ள பாவனாரில் இருந்து நடந்து பாத யாத்திரையாகக் கிளம்பினார். நான்காவது நாள் அவர் கைது செய்யப்பட்டார். ஜவாஹர்லால் சத்தியாகிரகத்திற்குக் கிளம்பு முன் கைது செய்யப்பட்டார். அடுத்து சர்தார் வல்லபாய் படேல், சி. ராஜகோபாலாச்சாரியார், மௌலானா அபுல் கலாம் ஆஜாத் முதலானோர் சிறைப் படுத்தப்பட்டனர்.

- டில்லியில் அரசாங்கம் புது டில்லிக் கட்டடங்களுக்கு 1931ல் மாற்றப்பட்டது.

- இந்தியாவின் சித்திரங்களுடன் கூடிய ஆறு தபால் தலைகள் முதன் முதலாக வெளியிடப் பட்டது.

# உலகின் மற்ற பகுதிகளில்...

- கார்ட்டூன்களும் காமிக் படங்களும் பல பத்திரிகைகளில் வெளிவந்து கொண்டிருந்த போதிலும் புத்தக வடிவில் காமிக்ஸ் முதலில் வெளிவந்தது 1934ல் தான். அப்புத்தகத்தின் பெயர் 'ஃபேமஸ் ஃபன்னீஸ்'. இது 68 பக்கங்களைக் கொண்டது.



- உலகிலேயே மிகப்பெரிய தொங்கும் பாலம் சான்பிரான்சிஸ்கோவில் 1937ல் போக்குவரத்திற்காகத் திறந்து வைக்கப் பட்டது. 'கோல்டன் கேட் பிரிட்ஜ்' என்ற இப்பாலத்தின் நீளம் 4200 அடியாகும்.

- தற்போதைய மியான்மரான முந்தைய பர்மா 1937ல் இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டது.

- அமெரிக்காவில் தான் உலகின் முதலாவது ரத்த வங்கியை 1937ல் 'பெர்னார்ட் ஃபூஸ்டெஸ்' துவக்கினார்.

# இந்திய சுதந்திரப் போராட்டத்திற்கு ஆதரவு

சுபாஷ் சந்திர போஸை கல்கத்தாவில் அவரது வீட்டிலேயே சிறை வைத்திருந்தார்கள். ஆனால் 1941 ஜனவரி 17ல் அவர் தப்பி வெளியேறி மாறுவேடத்தில் பயணம் செய்து பெஷாவர், காபூல், மாஸ்கோ வழியாக பெர்லினை அடைந்தார். அவர் அங்கு சுதந்திர இந்தியா மையத்தைத் துவக்கி, இந்தியப்படைப் பிரிவு என்ற ராணுவ அமைப்பை ஏற்படுத்தினார். அவர் ஆஜாத் ஹிந்த் வானொலியைத் துவக்கி அதன் வாயிலாகப் பேசி வந்தார். உலக முழுவதும் இந்தியாவின் சுதந்திர வேட்கையை உணர்ந்ததோடு, இதற்காக நூதன முறையான அஹிம்சை வழியில் போராட்டம் நடப்பதை அறிந்து கொண்டது.

சீனக் குடியரசுத் தலைவர் சியாங்கே ஷேக் 1942ல் இந்தியாவிற்கு விஜயம் செய்த பின், இந்தியாவிடம் ஆட்சியைக் கொடுத்து விடும்படி பிரிட்டனுக்கு வேண்டுகோள் விடுத்தார். அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ரூஸ்வெல்ட்டும், பிரிட்டிஷ் பிரதமர் சர்ச்சிலுக்கு இந்தியாவிற்கு குடியேற்ற நாட்டு அந்தஸ்தை அளிப்பதாக வாக்களித்து, ஓர் இடைக்கால அரசாங்கத்தை நிறுவுங்கள் எனத் தந்தி கொடுத்தார். பிரிட்டிஷ் பாராளுமன்றத்திலும், பெரும்பான்மையோர் இந்தியாவில் தேசிய அரசாங்கம் அமைக்கப்பட வேண்டும் என்ற கருத்தை வெளியிட்டார்கள்.

பம்பாயில் கூடிய காங்கிரஸ் மாநாடு காங்கிரஸ் செயற்குழு இயற்றிய இரு தீர்மானங்களை ஏற்றது. ஒன்று பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவிலிருந்து போய்விட வேண்டும் என்பது. மற்றது இதற்கான இயக்கத்தை காந்திஜீ தலைமை ஏற்று நடத்த வேண்டும் என்பது. காந்திஜீ இதற்காக 'வெள்ளையனே வெளியேறு' என்று முழங்க இது நாடெங்கும் எதிரொலித்தது. ஆகஸ்ட் 8ந் தேதி நள்ளிரவில் பல காங்கிரஸ் தலைவர்கள் கைது செய்யப்பட்டார்கள். நாடெங்கிலும் வன்முறை தலைதூக்கியது.

காந்திஜீ சிறையில் இருந்தபடியே வைஸ்ராய்க்கு வேண்டுகோள் விடுத்தார். அதற்கு விடை கிடைக்காததால் 1943 பிப்ரவரியில் உண்ணாவிரதத்தைத் தொடங்கி 21 நாட்கள் உணவேற்காமல் இருந்தார். எக்கட்சியிலும் சேராத சில பிரமுகர்கள் காந்திஜீயை உடனே விடுதலை செய்யும்படி அரசாங்கத்தை வேண்டினார்கள். வைஸ்ராயின் எக்ஸிக்யூடிவ் கௌன்சில் இந்திய உறுப்பினர்கள் மூவர் தம் பதவிகளைத் துறந்தனர்.


'நேதாஜி' போஸ்

தரை வழியிலும், கடல், ஆகாய வழிகளிலும் சிரமப்பட்டு சுபாஷ் சந்திர போஸ் ஜப்பானை அடைந்தார். அதன் பிரதமர் டோஜோ இந்திய சுதந்திரப் போராட்டத்திற்கு எல்லா விதத்திலும் உதவி புரிவதாகக் கூறினார். இதே

சமயம் ராஷ்பிஹாரி போஸ் இந்திய சுதந்திர லீகை பாங்காக்கில் இருந்து சிங்கப்பூருக்கு மாற்றினார்.

சுபாஷ் சந்திர போஸ் ஜூலை 2ல் சிங்கப்பூர் வந்த போது இந்திய தேசிய ராணுவம் அவருக்கு ராணுவ மரியாதை அளித்தது. அப்போது முதல் அவர் 'நேதாஜீ' என்று அழைக்கப்பட்டார். அக்டோபர் 21ல் அவர் 'ஆஜாத் ஹிந்த்' அரசாங்கத்தை அமைத்து 'டில்லி சலோ' என்ற அறை கூவலையும் விடுத்தார்.

- முதலாவது தேசியப் பூங்கா 1935ல் டில்லி-நைனிடால் ரோடில் ஹெய்லி நேஷனல் பார்க் என அமைந்தது. பின்னர் இது 1957ல் கார்பெட் தேசியப் பூங்கா என்று பெயரிடப் பட்டது.



- குலபதி கே.எம். முன்ஷி 1938ல் பாரதீய வித்யா பவனை நிறுவினார்.

## உலகின் மற்ற பகுதிகளில்...

- தாய்லாந்து, மலேயா, ஜப் பான் ஆகிய நாடுகளில் வாழும் இந்தியர்கள் இந்திய சுதந்திர லீகை அமைத்து, அதன் தலைமையை ஏற்கும்படி சுபாஷ் சந்திர போஸிடம் 1942ல் வேண்டினார்கள்.



- இரண்டாவது உலகப் போருக்குக் காரணமாயிருந்த முக்கியமான இருவரும் துர்மரணம் அடைந்தார்கள். ஜெர்மனியின் நாஜீ சர்வாதிகாரி ஆடால்ஃப் ஹிட்லர் தற்கொலை செய்து கொண்டார். இத்தாலிய சர்வாதிகாரி முஸலோனி கொலை செய்யப்பட்டார். ஜெர்மனி 1945 மே 7ல் சரணடைந்தது. ஜப்பான் தொடர்ந்து போரை நடத்தவே, ஹிரோஷிமாவிலும், நாகசாகியிலும் அணுகுண்டுகள் ஆகஸ்ட் 6-லும், 9-லும் போடப்பட்டதால், தனக்கு ஏற்பட்ட பெருத்த உயிர்ச் சேதத்தையும், பொருட் சேதத்தையும் கண்டு ஜப்பான் ஆகஸ்ட் 14ல் சரணடைந்தது.

# அதிகார மாற்றத்திட்டம்

முஸ்லிம் லீக் தேசிய அரசாங்கம் அமைக்க இணங்கவில்லை என்று பிரிட்டன் கூறியது. சி.ராஜகோபாலச் சாரியார் சில முஸ்லிம் தலைவர்களைச் சந்தித்து தம் திட்டம் ஒன்றை அவர்களிடம் கொடுத்தார். இதன் படி



சி. ராஜகோபாலாச்சாரியார்

முஸ்லிம் லீக் இடைக்கால அரசாங்கம் அமைக்க உதவ வேண்டும். போருக்குப் பின் முஸ்லிம்கள் அதிகமாய் வாழும் பகுதிகள் தனிப் படுத்தப்பட்டு அவற்றிற்கு தனி அரசாங்கம் அமைக்கப்படும்.

முஸ்லிம் லீகின் தலைவர் ஜின்னா இதனை ஏற்கவில்லை. அவர் முதலில் பாகிஸ்தான் ஏற்பட்டாலே சுதந்திரம் பெறலாம் என்றார். காந்திஜீ 1944 செப்டம்பரில் ஜின்னாவைச் சந்தித்தார். அவர்களது பேச்சில் முன்னேற்றம் ஏற்படவில்லை. காங்கிரஸ் சார்பாக புலாபாய் தேசாய் இடைகால அரசாங்கத்தில் காங்கிரசும் முஸ்லிம் லீகும் சமமான இடங்களைப் பெறலாம் என யோசனை கூறினார்.

ஆஜாத் ஹிந்த் அரசாங்கத்தின் தலைநகர் சிங்கப்பூரிலிருந்து ரங்கூனுக்கு மாற்றப்பட்டது. இந்திய தேசிய ராணுவம் விரைவில் இந்திய எல்லையை அடைந்து விட்டது. மணிப்பூரின் மோய்ரிங்கில் இந்திய மூவர்ணக் கொடி ஏற்றப்பட்டது. நேதாஜீ 1944ல் ரங்கூனிலிருந்து வானொலி வாயிலாக ஜீன் 6 ல் பேசி, காந்திஜீயை நாட்டின் தந்தை என வர்ணித்தார்.

புதிய வைஸ்ராய் லார்ட் வேவல் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் பேசி 1945 ல் ஆட்சி மாற்றத்திற்கான திட்டத்தை வெளியிட்டார். அது இடைக்கால ஏற்பாடு என்றும், பிறகு அரசியல் நிர்ணய சட்டங்களை வகுத்துக் கொள்ளலாம் எனவும் கூறப்பட்டது. இதன் படி காங்கிரஸிற்கும், முஸ்லிம் லீகிற்கும் இடைக்கால ஆட்சி கௌன்சிலில் சம இடங்கள் இருக்கும் என்றும் வைஸ்ராயும் இந்திய ராணுவ தளபதியும் ஆகிய இரு வெள்ளையர்கள் மட்டுமே அதில் இடம் பெறுவார்களென்றும் தெரிவிக்கப்பட்டது. அனைத்துக் கட்சிகள் கூட்டம் கூட்டப்பட்டது. ஆனால் ஜின்னாவோ பாகிஸ்தான் அமைந்தாலே மற்ற பேச்சுக்கள் என்று கூறிவிட்டார்.

இக்கூட்டத்தால் ஏற்பட்ட ஒரே நற்பயன் வெள்ளையனே வெளி யேறு இயக்கத்தில் கைது செய்யப் பட்டவர்களெல்லாம் விடுவிக்கப் பட்டது தான். மாகாண கவர்னர்களின் கூட்டம் பொதுத்தேர்தலை நடத்தப் பரிந்துரை செய்தது. வைஸ்ராயும் அதனை ஏற்றார். காங்கிரஸ் தேர்தலில் கலந்து கொள்ள சம்மதித்தது. ஆனால் மற்ற யோசனைகளை ஏற்கவில்லை.



- ஜாலியன்வாலாபாக் படு கொலைக்குப் பழிவாங்கும் விதமாய் சர்தார் ஊதம் சிங் என்ற சீக்கியர் அப்படு கொலைக்குக் காரணமாயிருந்த முன்நாள் கவர்னர் மைக்கேல் ஓடையரை 1940 ல் லண்டனில் சுட்டுக்கொன்றார். 21 ஆண்டு களுக்கு முன் ஜாலியன் வாலா பாக் படுகொலையின் போது படுகாயமுற்றவர் ஊதம் சிங்.

## உலகின் மற்ற பகுதிகளில்...

- ஐக்கிய நாடுகள் சபையின் முதற் கூட்டம் லண்டனில் 1946 ஜனவரி 10 ல் நடைபெற்றது. 51 நாடுகளின் பிரதிநிதிகள் வந் திருந்தனர். ஐ. நா.வின் நிரந்திர இடம் நியூயார்க்கில் வைத்துக் கொள்ளத் தீர்மானிக்கப்பட்டது.
- அமெரிக்க நிறுவனம் 1946 ல் மின் படுகையைக் கண்டு பிடித்தது.
- முதலாவது மிக வேகமான ஆகாய வழியிலானது மணிக்கு 1200 கிலோ மீட்டர் எனப் பதிவு செய்யப்பட்டது 1947ல்.
- ஐக்கிய நாடுகள் நிறுவனம் இயற்கை சுற்றுப்புற சூழல் பிரச்சினைகள் பற்றி கவனிக்க அனைத்து நாடுகள் கூட்ட மைப்பை 1948ல் ஏற்படுத்தியது.

- ட்ரைவ்-இன்-தியேட்டர் முதலாவதாக அமெரிக்காவின் நியூஜெர்ஸியில் 1933 ல் திறக்கப் பட்டது.
- மாஸ்கோவில் மெட்ரோ சுரங்க ரயில் 1935ல் முதலாவதாக ஆரம்பிக்கப் பட்டது.
- முதலாவது பயணிகள் ஹெலி காப்டர் 1936 ல் ஜெர்மெனியில் பறந்தது.

# முடிவில் கிடைத்ததே சுதந்திரம்

இந்திய தேசிய ராணுவப்படை வீரர்களை பிரிட்டிஷ் ராணுவம் டில்லிக் குச் செல்ல விடாமல் தடுத்தது. பிரிட்டிஷ் படைகள் பர்மாவில் முன் னேறி வருகின்றன என்பதை அறிந்த நேதாஜீ ரங்கூனிலிருந்து பாங்காக்கிற்குச் சென்றார். அங்கு ஜெர்மனி சரணடைந் ததை கேட்டு மலேயா செல்லவே, அங்கு ஜப்பான் சரணடைந்ததை அறிந் தார். அங்கிருந்து அவர் சிங்கப்பூர் சென்று, தம் அமைச்சர்களுடன் ஆலோ சனை புரிந்தார். அவர் உடனே தலை மறைவாகி விட வேண்டுமென்றும் பிறகு திரும்பி வந்து விடுதலைப் படைக்குத் தலைமை தாங்கலாம் என் றும் யோசனை கூறினார்கள். அவர் ஜப்பானின் உதவி பெற ரஷ்யாவச மிருந்த மஞ்சூரியாவிற்குச் செல்லும் போது, தாய்பெய்யில் 1945 ஆகஸ்ட் 22 ல் விமான விபத்தில் மாண்டார். அவரது மரணம் பற்றி இன்றும் மர்மமே சூழ்ந்துள்ளது.

மத்திய சட்டசபைக்கு 1946 ல் நடந்த தேர்தலில் காங்கிரஸ் 56 இடங்களை வென்றது. முஸ்லிம் லீக் 30 இடங்களில் வெற்றி பெற்றது. மாகாண கௌன்சில் களில் காங்கிரஸிற்கு 923 இடங்களும், முஸ்லிம் லீகிற்கு 425 இடங்களும் கிடைத்தன. வங்காளத்தில் முஸ்லிம் லீக் அமைச்சரவையை அமைத்தது. பஞ்சாபில் கூட்டு மந்திரிச்பையும், மற்ற மாகாணங்களில் காங்கிரஸ் அமைச் சரவைகளும் அமைந்தன. சிந்தில் முஸ்லிம் லீக் பெரும்பான்மை பெற் றும், அதன் உறுப்பினர் பலர் காங் கிரஸில் சேர்ந்தனர்.

இந்தியத்தலைவர்களுடன் கலந்து ஆலோசிக்க மூன்று உறுப்பினர்கள் அடங்கிய காபினெட் மிஷன் இங்கி லாந்திலிருந்து வந்தது. அது இந்திய இணையத்தை அமைக்கலாமென்றும், முஸ்லிம்களுக்குத் தனி மாகாணங்கள் இருக்க வேண்டுமென்றும் கூறியது. நாடு மூன்று பிரிவுகளிலிருந்து பிரதிநிதி களைத் தேர்ந்தெடுத்து அரசியல் நிர்ணய சட்டங்களை வகுக்கலாமென்றும், அதனை பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்கும் என்றும் தெரிவித்தது.

ஜூன் மாதத்தில் இடைக்கால அர சாங்கம் அறிவிக்கப்பட்டது. இதில் ஜின்னா ஹிந்துக்களுக்கும், முஸ்லிம் களுக்கும் கொடுக்கப்பட்ட இட விகி தத்தை ஏற்க வில்லை. நேரு விடம் அமைச் சரவை அமைக்கும் படி கோரப் பட்டது. அவரது அமைச்சரவை செப்டம்பர் 2 ல் பதவி ஏற்றது. முஸ்லிம்கள் அந்த நாளைத் துயர நாளாக அனுஷ்டித்தார்கள். ஆயினும் லீக் அக்டோபர் 13ல் அமைச்சரவையில் சேர இசைந்தது. ஆனால், அது பாகிஸ்தான் அமைய முதல் வழி எனக் கூறியது.


ஜவாஹர்லால் நேரு

முஸ்லிம்களில் சிலருக்கு இது பிடிக்கவில்லை. அதனால் மதக் கல வரங்கள் கல்கத்தாவிலும், வங்காளத்

தின் பல இடங்களிலும் ஏற்பட்டன.

இதற்கு ஹிந்துக்கள் பதிலடி கொடுத்தார்கள். முஸ்லிம்கள் அதிக மாக வசிக்கும் நவகாளியில் ஹிந்துக் களின் பிணங்கள் குவிந்தன. காந்திஜீ அமைதியை நிலைநாட்ட அங்கு விரைந்து சென்றார். அவர் 17 கிராமங் களில் 120 மைல் தூரம் நடந்து ஹிந்து முஸ்லிம் ஒற்று மைக்காக வேண்டு கோள் விடுத்தார்.


ராஜேந்திர பிரசாத்

பாபு ராஜேந்திர பிரசாத் 1946 டிசம்பர் 11ல் அரசியல் நிர்ணய சபைக்குத் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். வைஸ்ராய் லார்ட் மௌண்ட் பேட்டன் காங்கிரஸ், முஸ்லிம் லீக், சீக்கியர் ஆகிய மூன்று கட்சித் தலைவர்களைச் சந்தித்து பேசி அதிகார மாற்றம் எவ் வாறு நடக் கும் என்பதை விவரித்தார். மறுநாள் ஜூன் 3ல் அவர் வானொலி வாயிலாக இந்தியா, பாகிஸ்தான் என இரு நாடுகள் ஏற்படுவதையும் அவை விரும்பினால் காமன்வெல்த்தில் இருக் கலாம் என்றும் அறிவித்தார். இந்திய சமஸ்தானங்களுக்கு அவை இந்த இரு நாடுகளில் எந்த ஒன்றிலும் சேர்ந்து கொள்ளும் உரிமை இருக்கிறது எனவும் தெரிவித்தார். ஜூலை 16ல் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் இந்திய சுதந்திர மசோ தாவை அங்கீகரித்தது. ஆகஸ்ட் 15ந் தேதி ஆட்சியை இந்தியாவிற்கு ஒப் படைப்பது என்று தீர்மானிக்கப்பட்டது.

## நம் நாட்டில் சில முதலானவை

- இந்தியாவின் முதலாவது குழந் தைகள் இல்லம் இந்தியப் பெண்கள் சங்கத்தால் 1923ல் சென்னையில் துவக்கப்பட்டது.
- இந்தியாவில் முதலாவது சைக் கிள் தொழிற்சாலை 1938ல் கல் கத்தாவில் அமைக்கப்பட்டது.
- இந்தியாவின் முதல் ரத்த வங்கி 1939 ல் யு.என் பிரம்மசாரியால் ஆரம்பிக்கப்பட்டது. இது உல கில் இரண்டாவதாகும்.
- குழந்தைகள் பத்திரிகையாய் தற்போது 12 மொழிகளில் வெளி வந்து கொண்டு இருக்கும். சந்தமாமா 1947ல் முதலில் தமிழில் அம்புலிமாமா என்றும் தெலுங்கில் சந்தமாமா என்றும் வெளியாகியது.
- சுதந்திர இந்தியா வெளியிட்ட முதல் தபால் தலை தேசியக் கொடியின் படத்தைக் கொண் டது. 3 1/2 அணா மதிப்புள்ள இந்த தபால் தலை 1947ல் வெளியிடப்பட்டது.
- சி. ராஜகோபாலசாரியார் தான் முதலாவது ஒரே இந்திய கவர்னர் ஜெனரலாக 1948ல் பதவி ஏற்றார்.
- இந்தியாவின் முதலாவது ராணுவ தளபதியாகப் பதவி ஏற்ற முதலாவது இந்தியர் ஜெனரல் கே. எம். கரியப்பா. (1949)

# இந்தியக் குடியரசு ஏற்பட்டது

பாகிஸ்தான் ஜின்னாவை கவர்னர் ஜெனரலாகக் கொண்டு 1947 ஆகஸ்ட் 14 ல் உருவானது. இதன் பிரதம மந்திரி லியாகத் அலிகான். இந்தியாவின் கவர்னர் ஜெனரல் லார்ட் மௌண்ட் பேட்டன். ஜவாஹர் லால் நேரு சுதந்திர இந்தியாவின் முதலாலது பிரதம மந்திரியாக 14ந் தேதி நள்ளிரவில் பதவி ஏற்றார்.


ஜவாஹர்லால் நேரு

டில்லியில் செப்டம்பர் 4 ல் மதக் கலவரங்கள் மூளவே, காந்திஜீ நவகாளியில் இருந்து டில்லிக்கு விரைந்து வந்தார். முஸ்லிம்கள் கூட்டம் கூட்டமாய் பாகிஸ்தானுக்கு ஓட, பாகிஸ்தானில் இருந்து ஹிந்துக்களும் ஆயிரக்கணக்கில் இந்தியாவிற்கு வந்தார்கள். டில்லியில் அமைதி நிலை நாட்டப்பட காந்திஜீ மீண்டும் உண்ணாவிரதத்தை மேற்கொண்டார். ஐந்து நாட்களுக்குப் பின் ஜனவரி 30ல் துரதிர்ஷ்ட வசமாக நாதுராம் கோட்ஸே என்ற ஹிந்துவால் சுட்டுக் கொல்லப் பட்டார்.


காந்திஜி

அரசியல் நிர்ணய சபை தன் பணியை 1949 நவம்பர் 6 ல் முடித்தது. நாடாளும் மன்றம் நகல் மசோதாவை ஏற்றது. அரசியல் நிர்ணயச் சட்டம் 1950 ஜனவரி 26 ல் அமலில் வந்தது. இதனால் சுதந்திர ஜன நாயகக் குடியரசாக இந்தியா அறிவிக்கப்பட்டது. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம், நீதி இவை யாவும் உறுதி செய்யப் பட்டன.

காஷ்மீரில் வன்முறை தலை தூக்கியது. அதன் மன்னர் ஹிந்து. மக்களில் பெரும்பாலோர் முஸ்லிம்கள். காஷ்மீர் இந்தியாவுடன் சேரக் கூடாதென எதிர்ப்பு கிளம்ப அதன் மன்னர் இந்தியாவில் சேர்ந்து விட்டதாகக் கையொப்ப மிட்டார். பாகிஸ்தானின் பட்டாணியக் கூலிப்படைகள் காஷ்மீருக்குள் நுழைந்தன. இதனால் முதலாவது இந்திய பாகிஸ்தான் போர் மூண்டது.

இந்தியாவும் பாகிஸ்தானும் 1948 ஜனவரி 1 ல் காஷ்மீரில் போரை நிறுத்த ஒப்புக் கொண்டு வாக்குக் கணிப்பில் அதன் எதிர்காலத்தை நிர்ணயிக்கச் சம்மதித்தன.

(அடுத்த மாதம் இந்தியா முன்னேற்றப்பாதையில்—1951-2000)



# மன்னனின் யுக்தி

மற்ற நாடுகளை விட பிங்கள நாடு மிகவும் பின் தங்கி இருந்தது. அதற்கு என்ன காரணம் எனக் கண்டறிந்து வரும்படி மன்னன் மங்களசேனன் தன் மகன் தர்மசேனனைப் பிற நாடுகளுக்குப் போய்வரச் சொன்னான். அந்நாடுகள் மிகவும் முன்னேறி இருப்பது கண்டு தர்மசேனன் திகைத்துப் போனான். தன் நாடு அவ்வாறே முன்னேற்றம் அடைய வேண்டும் என்று அவன் ஆசைப்பட்டான். அதற்கான விவரங்களைச் சேகரித்துக்கொண்டு அவன் பிங்களபுரத்திற்குத் திரும்பி வந்து கொண்டிருக்கையில் அவனது தந்தை மங்களசேனன் திடீரென மாரடைப்பால் இறந்து விட்டான் என்ற செய்தி அவனுக்கு எட்டியது. தந்தையின் மறைவுக்குப் பின் அவன் நாட்டின் மன்னன் ஆனான்.

நாட்டை முன்னேற்றப் பாதையில் கொண்டு செல்ல அவன் பல திட்டங்களை வகுத்தான். ஆனால் அவற்றைச் செயல்படுத்தப் பொக்கிஷத்தில் பணம் இல்லை. மக்கள் ஏற்கனவே வரிச்சுமை தாங்க முடியாமல் இருந்ததால் புது வரிகளையும் விதிக்க முடியவில்லை. நாட்டின் ஆறுகளால் வயல்களில் நல்ல விளைச்சல் இருந்தும் ஏன் தன் நாடு முன்னேறவில்லை என்று தர்மசேனன் யோசித்தான். இதற்கான காரணத்தைக் கண்டறிய அவன் மாறுவேடத்தில் நாட்டைச் சுற்றிப் பார்ப்பது எனத் தீர்மானித்தான்.

அவ்வாறு செல்கையில் ஓரிடத்தில் ஒரு இளைஞன் படுத்துத் தூங்கிக் கொண்டிருப்பதை அவன் கண்டான். அந்த இளைஞனைத் தட்டி எழுப்பி, "என்னப்பா! பட்டப்பகலில் இப்படித் தூங்குகிறாயே. நீ வேலை செய்வதில்லையா?" என்று கேட்டான். அவனோ, "நான் ஏன் வேலை செய்ய வேண்டும்? ஊரில் யாரிடம் கேட்டாலும், எனக்கு சாப்பாடு கிடைத்து விடுகிறதே!" என்றான். அது கேட்டு தர்மசேனன் ஆச்சரியப்பட்டு

வெ. லாவண்யா

அருகிலிருந்த ஊருக்குப்போய் கிராம அதிகாரி கிட்டப்பாவின் வீட்டை அடைந்தான்.

கிட்டப்பாவும் அவனை வரவேற்று நல்ல சாப்பாடு போட்டான். அதை உண்ட பின் தர்மசேனன், "இப்படி எல்லோருக்கும் இவ்வூரார் சாப்பாடு போடுகிறார்களாமே. இதனால் ஊரில் வேலை செய்யாமல் சோம்பேறிகளாகத் திரிபவர்கள்தானே அதிகரிப்பார்கள்?" என்றான். கிராம அதிகாரியும், "நீங்கள் சொல்வது சரியே. ஆனால் இங்கே தேவைக்கு மேல் தானியம் விளைகிறது. அவற்றை வேறு ஊர்களுக்கோ அயல் நாடுகளுக்கோ கொண்டு செல்ல சரியான பாதைகள் இல்லை. ஒரு ஊரிலிருந்து மறு ஊருக்குக்கூட போக முடியாது. ஏனெனில் சரியான பாதைகள் அமைக்கப்படவில்லை. அதனால் விளைந்த தானியம் வீணாகிவிடுமே என்று எண்ணியே நாங்கள் யார் வந்தாலும் சாப்பாடு போடுகிறோம். இந்த நிலை எங்கள் ஊரில் மட்டுமல்ல, நாட்டின் எல்லா ஊர்களிலும் இப்படித்தான் நடக்கிறது" என்றார்.

அது கேட்டு தர்மசேனன், "இந்த அமோக விளைச்சல் பயிரை நீங்கள் அயல் நாடுகளுக்கு அனுப்ப ஏன் பாதைகளை நீங்களே சரிப்படுத்தக் கூடாது?" என்று கேட்டான். கிராம அதிகாரி சற்று நடுங்கியவராய், "ஐயோ! அது மன்னரின் வேலையா





யிற்றே. நான் கிராம அதிகாரி. சிறு வேலையை அதுவும் என் கிராம அளவிற்குள் தான் செய்ய முடியும்" என்றார். அப்போது அவன், "என்ன உங்கள் மன்னன்! மக்களுக்கு வசதிகள் செய்து கொடுக்க முடியாதவன் ஏன் நாட்டை ஆள வேண்டும்? எங்காவது ஓடிப் போக வேண்டியது தானே!", என்று வாய்க்கு வந்தபடி பேசினான்.

அதைக் கேட்ட கிராம அதிகாரி கடுங்கோபம் கொண்டு, "யார் நீ? இந்த நாட்டைச் சேர்ந்தவனல்ல என்று தெரிகிறது. இன்னொரு முறை எங்கள் மன்னரைப் பற்றிப் பேசினால் நான் உன்னை லேசில் விடமாட்டேன். ஜாக்கிரதை!" என்று எச்சரித்தார். அது கேட்டு தர்மசேனன் மனதிற்குள் சந்தோஷப்பட்டான். புதிதாகத் தெரிந்து கொள்ள இனி எதுவும் இல்லை என்று நினைத்து அவன் அங்கிருந்து சிரமப்பட்டு கரடு முரடான பாதைகளில் சென்று முடிவில் தலை நகரை அடைந்தான்.

மறு நாள் தர்மசேனன் தன் அமைச்சர்களைக் கூட்டி, "நம் நாடு ஏன் இந்த சீர்கேடான நிலையில் இருக்கிறது என்பதற்கான உண்மையான காரணம் எனக்குத் தெரிந்து விட்டது. அதைத் திருத்த வழியும் எனக்குத் தெரிந்து விட்டது" என்று கூறி தான் மாறு வேடத்தில் நாட்டைச் சுற்றிப் பார்த்து வந்ததை விவரமாகக் கூறினான்.

தர்மசேனன், "சிவகிரியில் சிவனார் செல்வன் என்ற கவிஞர் இருக்கிறார். அவரை கௌரவித்து சன்மானம் அளிக்க வேண்டும். இன்னும் இரண்டு மாதத்தில் தசரா வரப்போகிறது. அப்போது விழா நடத்தி அவரை கௌரவிக்கலாம். அதற்கு முன் நான்

சிவகிரிக்குப் போய் அவரை விழாவிற்கு வருமாறு அழைக்க வேண்டும். எனவே நான் சிவகிரிக்குப் போவதையும், கவிஞரை கௌரவிப் பதையும் நாடெங்கும் பறை சாற்று வித்து அறிவியுங்கள்'' என்றான்.

மன்னர் சிவகிரிக்குச் செல்கிறார் என்றதும் அவ்வூருக்குச் செல்லும் பாதைகளெல்லாம் செப்பனிடப் பட்டன. ஆங்காங்கே அலங்கார வர வேற்பு வளைவுகள் அமைக்கப் பட்டன. மன்னன் தர்மசேனனும் சிவ கிரியை அடைந்தான். தான் சென்ற பாதை செப்பனிடப்பட்டு சீராக இருந்தது கண்டு மகிழ்ந்து போனான். சிவகிரியில் அவன் சிவனார் செல்வ னைக் கண்டு, "தங்களை விழாவிற்கு அழைக்க நான் இங்கு வந்ததற்கு இன்னொரு காரணமும் இருக்கிறது. நான் வந்ததால் தலைநகரையும், இந்த ஊரையும் இணைக்கும் பாதை செப்ப னிடப்பட்டது. அதனால் இனி இவ் வூரிலிருந்து தலைநகருக்கு சிரமப் படாமல் மக்கள் வந்து போகலாம்'' எனக் கூறி அவரை அழைக்க, கவிஞரும் அதற்கு வரச் சம்மதித்தார்.

மன்னன் தலைநகருக்குத் திரும்பி வந்ததும் தலைநகரின் நான்கு திசை களிலுள்ள நான்கு தொலை தூர ஊர்களைத் தேர்ந்தெடுத்தான். அந்த ஊர்களுக்கும் தான் விஜயம் செய்யப் போகும் நாளை அறிவித்தான். இதனால் அவ்வூர்களுக்கும், தலை நகருக்கும் இடையே உள்ள பாதை கள் செப்பனிடப்பட்டுச் சீராக்கப் பட்டன. இதனால் அநேகமாக அந் நாட்டின் பாதைகள் சீராக்கப்பட்டு விட்டன. தசரா விழாவும் நன்கு நடைபெற்றது.

இதனால் மக்கள் எந்த ஓர் ஊரிலிருந்து வேறு எந்த ஊருக்கும் சிரமமில்லாமல் சென்று வந்தனர். விவசாயப் பொருள்களை உள் நாட்டில் மட்டுமல்லாமல் வெளி நாடுகளிலும் நல்ல விலைக்கு விற்க முடிந்தது. இப்படியாக தர்மசேன னின் யுக்தியால் பிங்கள நாடு முன்னேற்றத்தை அடைந்தது.



## 60. சார்வாக வதம்

# மகாபாரதம்

பாரதப்போர் முடிந்ததும் பாண்டவர்கள் போரில் இறந்த உறவினர்களுக்கு எள் கொண்டு தர்ப்பணம் செய்தார்கள். தானதர்மங்கள் செய்தார்கள். ஒரு மாதகாலம் துக்கம் அனுசரித்தார்கள். ஹஸ்தினாபுரத்திற்கு வெளியே குடில் அமைத்து அதில் திருதராஷ்டிரன், விதுரன், மற்றும் சில குடிமக்களுடன் இருந்து வந்தார்கள். தருமரைக் காண வியாசர், பல முனிவர்கள், அந்தணர்கள் எனப் பலரும் வந்தார்கள்.

தருமர் அவர்களிடம், "கிருஷ்ணரும், பீமனும், அர்ஜுனனும் எனக்கு வெற்றி கிடைக்கும்படிச் செய்தார்கள். ஆனால் இது எனக்கு ஒரு வெற்றியாகத் தோன்றவில்லை. உறவினர்கள் இல்லை, அபிமன்யு, உப பாண்டவர்கள் இல்லை. போர் முடியும் போதுதான் தான வீர சூரனான கர்ணன் எங்கள் தமையன் என்பது தெரிந்தது. அவன் ஏன் இறந்தான் என்றும் தெரியவில்லை?" என்றார்.

அப்போது அங்கு. வந்திருந்த நாரதர் கர்ணன் பெற்ற சாபங்களைப் பற்றிக் கூறலானார். கர்ணன் துரோணரிடம் பயிற்சி பெறுகையில் அர்ஜுனனின் அம்பு எய்யும் திறமையைக் கண்டு பொறாமைப்பட்டுக் கொண்டிருந்தான். தருமனின் அறிவு, பீமனின் பலம், நகுலன், சகாதேவன்





ஆகியோரின் நல்லியல்புகள், கிருஷ்ணரும், அர்ஜுனனும் கொண்ட நட்பு இவை எல்லாம் அவனது பொறாமையை அதிகரித்தது. அதனால் அவன் துரியோதனனுடன் நெருங்கிப் பழகலானான்.

ஒரு நாள் கர்ணன் துரோணரைத் தனிமையில் சந்தித்து, "ஐயா! நீங்கள் சீடர்களைச் சமமாக எண்ணு பவர் தாமே? நான் அர்ஜுனனை எப்படியாவது வென்று விட வேண்டும். அதனால் எனக்கு பிரம்மாஸ்திரம் எய்யும் விதத்தைக் கற்றுக் கொடுங்கள்" என்று வேண்டினான்.

துரோணரின் பிரியமான சீடன் அர்ஜுனன். அதனால் அவர், "நீ தேரோட்டியின் மகன். பிரம்மாஸ்திரத்தை எய்யும் முறையை அந்தணர்களுக்கும், க்ஷத்திரியர்களுக்கும் மட்டுமே கற்பிக்க வேண்டும். இவர்களைத் தவிர வேறுயாருக்கும் கற்றுக் கொடுக்கக் கூடாது. அதனால் உன் கோரிக்கையை நான் நிறைவேற்ற முடியாது" என்று கூறி அனுப்பி விட்டார்.

இதைக் கேட்ட பின் கர்ணன் மகேந்திரகிரியில் தவம் புரிந்து கொண்டிருக்கும் பரசுராமரைக் கண்டு விழுந்து வணங்கி, "ஐயா! நான் பிருகுவம்சத்தில் பிறந்த பிராமணன். என்னைத் தங்கள் சீடனாக ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்று வேண்டினான். பரசுராமரும் சம்மதித்து அவனுக்கு பல அஸ்திர-சஸ்திரங்கள் பிரயோகிக்கும் விதத்தைக் கற்றுக் கொடுத்தார்.

ஒரு நாள் கர்ணன் பரசுராமரின் ஆசிரமத்திலிருந்து சற்று தூரத்தில் வில் அம்புகளுடன் போய்க் கொண்டிருக்கையில் ஒரு பசுவை அம்பால் கொன்றுவிட்டான். அது ஒரு அந்தணனின் ஹோமத்திற்கான பசு என்று அவனுக்குத் தெரிந்தது. அவன் அந்த அந்தணனைக் கண்டு தன் செயலைக் கூறித்தன்னை மன்னிக்கும்படி வேண்டினான். ஆனால் அவர் அவனை மன்னிக்க முடியாது எனக் கூறி போரில் அவனது தேர்ச்சக்கரம் பூமியில் புதைந்து போய் அவன் நிற்கும் போது எதிரி அவனைக்கொல்வான் என்று சாபம் கொடுத்தார்.

கர்ணன் பரசுராமரின் மனம் குளிர பணிவிடைகள் செய்து பல அஸ்திர-சஸ்திரங்கள் எய்வதையும், பிரம்மாஸ்திரம் பிரயோகிக்கும் முறையையும் கற்றுக் கொண்டான். ஒரு நாள்



பரசுராமர் தன் தலையைக் கர்ணனின் தொடை மீது வைத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்.

அப்போது பயங்கர புழுவான காட்டு அட்டை கர்ணனின் தொடை மீது ஏறி அவனது தொடையைத் துளைக்கலாயிற்று. கர்ணன் அதனால் ஏற்பட்ட வலியைப் பொறுத்துக் கொண்டு தொடையை அசைத்தால் குருவின் தூக்கம் கலைந்து விடுமோ என்று எண்ணி கற்சிலை போல இருந்தான். அவனது தொடையி லிருந்து ரத்தம் வெளிவந்து பரசு ராமரின் தலையை நனைத்தது. அதனால் தூக்கம் கலைந்து அவர் எழுந்து பார்த்தார். அட்டைப்புழு கர்ணனின் தொடையைத் துளைக்க, அதிலிருந்து ரத்தம் கசிவதை அவர் கண்டார்.

உடனே கர்ணனைப் பார்த்து அவர் கோபத்தோடு, "உண்மையைச் சொல்! நீ பிராம்மணனா? பிராம்மணனால் இந்த மாதிரி வலியை எல்லாம் பொறுத்துக் கொண்டிருக்க முடி யாதே!" என்று கேட்டார். கர்ணன் அவரது கோபத்தைக் கண்டு பயந்து, நடுங்கி தான் பிராம்மணன் அல்ல என்றும், தேரோட்டியின் மகன் என்றும் உண்மையைக் கக்கி விட்டான். பரசுராமர், "நீ தக்க சமயத்தில் நான் கற்றுக் கொடுத்த பிரம்மாஸ்திரம், மற்ற அஸ்திரங்கள் எய்யும் முறைகளை எல்லாம் மறந்து போய் நிர்கதியாய் நிற்பாய்" என்று சாபம் கொடுத்தார்.

இப்படி எல்லாம் சாபம் பெற் றும், கர்ணன் மாவீரனாகவே திகழ்ந் தான். கர்ணன் பலசாலி எனக் கண்டு கிருஷ்ணர் தன் அருளால் பிறந்த அர்ஜுனனைக் காக்க கர்ணனிட மிருந்து அவனது கவச குண்டலங் களைப் பெற்றுக் கொண்டு போனார். கர்ணன் போரில் தோற்றுப் போக இவை தான் காரணங்கள்.

நாரதர் கர்ணனைப் பற்றி இவ் வாறு கூறியதும் தருமர் கர்ணனை இழந்தது போல எவ்வளவோ தாய் மார்கள் தாம் பெற்ற மகன்களை இழந் திருப்பார்களே. இந்தப் பாவங்கள் எல்லாம் என்னைத் தானே சாரும். இதென்ன அவல வாழ்வு. எனக்கு இந்த நாடே வேண்டாம். அர்ஜுனா! நீயே இந்த நாட்டை ஆண்டு வா! நான் தீர்த்த யாத்திரையாகக் கிளம்பிச் செல்கிறேன்" என்றார்.

இதைக் கேட்ட அர்ஜுனன், "அண்ணா! நாம் நம் நாட்டைத் திரும்பப் பெற க்ஷத்திரிய தர்மத்தைத் தான் கடைப் பிடித்தோம். நாடு கைக்கு வந்த பின் ஆட்சி புரியாமல் பிச்சை எடுத்து வாழ்வோம் என்று கூறுவது சரியல்ல. பிச்சை எடுப்பது என்று முன்பே தீர்மானித்திருந்தால் இவ்வளவு பேர்களை போரில் இழந்திருக்க வேண்டாமே. இப்போது இவ்வாறு செய்தால் எல்லோரும் சிரிப்பார்கள். ஏழைமையை நாமே வலிய வரவழைத்துக் கொள்ளக் கூடாது. எல்லா தர்மங்களுக்கும், செயல்களுக்கும் மூல காரணமாக இருப்பது பணம். எனவே நாட்டை ஏற்று அசுவமேதயாகம் புரிந்து எல்லாப் பாவங்களையும் போக்கிக் கொள்ளுங்கள்" என்றான்.



பீமனும், அர்ஜுனன் கூறியதை பலப்படுத்தினான். நகுலனும், சகாதேவனும் கூட பீமனும், அர்ஜுனனும் கூறியதையே சொன்னார்கள். துரௌபதியும், அங்கிருந்த ரிஷிகளும், முனிவர்களும் கூட தருமர் நாட்டை ஏற்று ஆட்சி புரிவது தான் சரி என்று அறிவுரை கூறினார்கள். வியாசரும் தருமரிடம், "ஒருவன் தன்னைக் கொல்ல வந்தவன் எவ்வளவு படித்த மாபெரும் பண்டிதராக இருந்தாலும் அவரைக் கொல்வதில் எவ்வித தவறோ அல்லது பாவமோ இல்லை. எனவே, உன்னை எவ்விதப் பாவமும் சேரவில்லை" என்று கூறினார்.

தன் தம்பிகளும், மகரிஷி வியாசரும், கிருஷ்ணரும் கூறியவற்றை எல்லாம் கேட்ட பின் தருமர் நாட்டை விட்டு சன்னியாசியாகப் போகும் எண்ணத்தைக் கைவிட்டார். முடிவில் ஆட்சி புரிய இணங்கினார்.

தருமர் ஹஸ்தினாபுரத்திற்குச் செல்ல ரதம் அலங்கரிக்கப்பட்டது. பீமன் ரதத்தில் பூட்டப்பட்ட குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்துக் கொண்டு அதில் தேரோட்டியின் இடத்தில் அமர்ந்தான். அர்ஜுனன் தருமருக்குப் பக்கத்தில் இருந்து கொண்டு வெண் குடையைப் பிடித்தான். நகுலனும், சகாதேவனும் அவருடைய இரு புறங்களில் நின்று வெண்சாமரங்களை வீசிக் கொண்டிருந்தார்கள்.

ஹஸ்தினாபுரத்துத் தெருக்கள் அலங்கரிக்கப்பட்டு, மலர்கள் தூவப்



பட்டிருந்தன. கொடிகள், தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன. தருமரின் ரதம் ஹஸ்தினாபுரத் தெருக்கள் வழியே சென்ற போது மக்கள் அவற்றின் இரு புறங்களிலும் நின்று அவரை வணங்கி, வாழ்த்தி, கோஷமிட்டார்கள்.

தருமர் அரண்மனையை அடைந்ததும் செளம்யரையும், திருதராஷ்டிரனையும் வணங்கி, தெய்வ ஆராதனை செய்தார். அப்போது திடீரென ஒரு சலசலப்பு ஏற்பட்டது. துரியோதனனின் நண்பனான சார்வாகன் என்பவன் தருமரை அணுகி, "உறவினர்களையெல்லாம் கொன்று விட்டு நீ என்ன சுகத்தைக் கண்டாய்? உனக்கு இப்படி ஒரு வாழ்வு தேவைதானா?" என்று இகழ்ந்தான்.

தருமர் அங்கு கூடி இருந்த எல்லோரையும் பார்த்தார். அப்போது அந்தணப் பிரமுகர்கள், "அரசே! இந்த சார்வாகன் தன் சொந்த அபிப்பிராயத்தைக் கூறுகிறான். நாங்களும் இப்படி எண்ணவில்லை. மக்களும் இவ்வாறு நினைக்கவில்லை. இவன் துரியோதனனின் கையாளாக இருந்தவன். அதனால் தான் இப்படி எல்லாம் பிதற்றுகிறான். இவன் பேச்சில் விஷத்தைக் கக்குகிறான். இதைப் பொருட்படுத்த வேண்டாம். உங்களுக்கு ஒரு கெடுதலும் வராது. உங்களுக்கு நன்மையே ஏற்படும்", என்று கூறி யாவரும் சேர்ந்து சார்வாகனைக் கொன்றார்கள்.

கிருஷ்ணரும் தருமருக்கு மனச் சாந்தியை ஏற்படுத்த, "இந்த சார்வாகன் கிருதயுகத்தில் ராட்சஸனாகப் பிறந்திருந்தான். இவன் பதரி வனத்தில் அமர்ந்து தவம் செய்தான். பிரம்மா இவன் முன் தோன்றி என்ன வரம் வேண்டும் என்று கேட்கவே, இவனும் தனக்கு பிராம்மணர்களால் தான் மரணம் ஏற்பட வேண்டுமென்ற வரத்தைக் கேட்டான். அதனால் தான் இன்று இவன் பிராம்மணர்களால் அடித்துக் கொல்லப்பட்டான்", என்று விளக்கம் அளித்தார்.

இதன் பிறகு தருமருக்கு முறைப்படி பட்டாபிஷேகம் நடைபெற்றது. தௌம்யர் ஒரு மேடை அமைத்து, அதன் மீது தருமரையும், துரௌபதியையும் அமரச் சொல்லி அவர்களுக்கு முன் அக்கினியை வளர்த்தார். அவர் தருமரை ஹோமம் செய்யச் சொன்னார். இதன் பின் கிருஷ்ணர் தீர்த்தத்தை நிரப்பி தருமருக்கு

அபிஷேகம் செய்தார். அதன்பின் தருமர் 'பூவுலகச் சக்கரவர்த்தி' என்று அறிவிக்கப்பட்டார். இதனை திருத ராஷ்டிரனும் வரவேற்றான். மக்களும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து அதனை வரவேற்றார்கள். மங்கள வாத்தி யங்கள் முழங்கின. தருமர் யாவருக் கும் தர்மங்களைச் செய்தார்.

அதன்பின் அவர் மக்களை நோக்கி, "மகாஜனங்களே! எங் களுக்கு திருதராஷ்டிரர் தெய்வம் போன்றவர். அவர் கூறுவதற்கு நாம் யாவரும் கட்டுப்படுவோம். நாங்கள் அவருக்குப் பணிபுரிந்து வருவோம். வயதில் மூத்தவரான அவருக்கு நீங் களும், நாங்களும் மரியாதை அளிக்க வேண்டும்" என்றார்.

அதன் பின் அவர் பீமனை யுவ ராஜனாக நியமித்தார். சஞ்சயன் பொக் கிஷ அதிகாரி என அறிவிக்கப் பட்டான். மேலும் ஆலோசகர் என்ற பதவியும் அவனுக்கு அளிக்கப் பட்டது. நகுலன் அரசாங்க ஊழியர் களின் நலன்களைப் பார்த்துக் கொள்ள நியமிக்கப்பட்டான். அர் ஜுனனுக்கு மக்கள் நலனைக் காக்கும் துறை அளிக்கப்பட்டது. தௌம்யர் அற நிலையங்களைப் பேணும் பொறுப்பை ஏற்றார். சகாதேவனைத் தமக்கு எல்லா விஷயங்களிலும் துணைபுரிய தருமர் வைத்துக் கொண்டார்.

இதன் பின் நாட்டில் போரில் இறந்தவர்களுக்கு சிரார்த்தங்கள் செய்யப்பட்டன. திருதராஷ்டிரன், துரியோதனன் முதலியோருக்கும் தருமர், துரோணர், கர்ணன், திருஷ் டத்யும்னன், கடோத்கஜன், அபி மன்யு ஆகியோருக்கும் சிரார்த் தங்கள் தனித்தனியே செய்வித்தனர். போர் முடிந்து விட்டதால் நாடு எப்போது முள்ள நிலைக்கு வந்தது. தர்ம சத்திரங்கள் கட்டப்பட்டன. ஏரிகள் பழுது பார்க்கப்பட்டன. கிணறுகள் வெட்டப்பட்டன. குளங்கள் அமைக் கப்பட்டன. தருமர் மக்கள் நலனைக் கருத்தில் கொண்டு செவ்வனே ஆட்சி புரிந்து வரலானார்.



## பரோபகாரி பழனி

பழனி மாறு வேடத்தில் கோவிந்தனின் வீட்டிற்குப் போய்க் கதவைத் தட்டவே, கோவிந்தன் கதவைத் திறந்தான்.

என்ன ? யார் நீ? என்ன வேண்டும்?

மங்கப்பன் வேண்டும்.

மாறுவேடத்திலிருந்த பழனி உள்ளே போய் நாற்காலியில் உட்கார்ந்தான்.

ஜோகேந்தரின் மகன் நான். உன் தந்தை எங்கே?

அவர் என் தந்தை. எப்போதோ இறந்து போய் விட்டார். அவரிடம் உனக்கு என்ன வேலை?

அவர் என் தந்தைக்கு லட்சம் வராகன்கள் கொடுக்க வேண்டும். அந்தக் கடனை வசூல் செய்ய வந்தேன். சட்டெனப் பணத்தைக் கொடுத்து என்னை அனுப்பு!

என்ன? என் தந்தை உன்தந்தையிடம் லட்சம் வராகன்கள்கடனாக வங்கினாரா? பேஷ்! பேஷ்!! நான் இருக்கும் இந்த வீட்டைத் தவிர ஒருகாசு கூட என்னிடம் இல்லை. வேண்டுமானால் பார்த்துக் கொள்.

கோவிந்தன் இரும்புப் பெட்டியையும் மற்ற பெட்டிகளையும் அவனுக்குக் காட்டினான்.


















அதன்பிறகு என்ன செய்யலாம் என்று யோசித்த வாறே பழனி அங்கிருந்து கிளம்பினான்.


ஐயோ...!
உண்மையிலேயே அந்தப் பிசாசு வந்து என்னை வாட்டினால் என் கதி என்ன?
கோவிந்தனுக்குப் பைத்தியம் பிடிப்பது போலாயிற்று.


நடுராத்திரி கோவிந்தன் ஆல மரத்தடியே சென்று பிசாசு வேஷம் போட்டுக் கொண்டான்.


இந்த ஜன நடமாட்டமில்லாத இடத்தில் அந்தப் பிசாசோடு மோதுவதை விட, என் பணத்தை எல்லாம் வீட்டிற்குக் கொண்டு போய் விடுவதே மேல்.


கோவிந்தன் தான் பணத்தை மறைத்து வைத்த இடத்தைத் தோண்டி குடங்களை வெளியே எடுத்தான். அப்போது.....


மரத்தின் மேலிருந்து 'தொப்' பென்று கோவிந்தனின் முன் பழனி குதித்தான்.


பேய்..!
பிசாசு..!!
என்னைக் காப்பாற்றுங்கள்
PAANI


பழனி கோவிந்தனைப் பிடித்து, ஆல மரத்தில் கட்டிவிட்டு, தன் நாய் பைரவனைக் காவலாக வைத்து விட்டு ஊருக்குள் சென்றான்.


பிசாசு நாடகம் முடிவிற்கு வந்து விட்டது. உங்களுக்கு உண்மையான மங்கப்ப பிசாசைக் காட்டுகிறேன். பயப்படாமல் என்னுடன் வாருங்கள்.


அட...! நம்ம கோவிந்தன்! இவனா பிசாசு?
என்ன மோசடி...!
என்ன மோசம்! என்ன வேஷம்!!


தன் தந்தை அக்கிரம வழியில் சம்பாதித்த பணத்தை எல்லாம் பித்தளைக் குடங்களில் போட்டு இவன் இவற்றை இங்கே புதைத்து வைத்து தன் தந்தை பிசாசாகி விட்டதாகக் கூறி உங்களை நம்ப வைத்தான். நீங்களும் நம்பி பயப்பட்டீர்கள். பேய், பிசாசு என்று சொல்லி ஒருவன் பய முறுத்தி அதனால் நீங்கள் பயந்து ஏமாறு கிறீர்கள். அதனால் இனியும் இப்படி ஏமாறாமல் விழிப்புடன் இருங்கள்!
கோவிந்தனையும், பணக்குடங்களையும் கிராம அதிகாரியிடம் ஒப்படைத்து விட்டு, பழனி தன் நாயுடன் வேறு ஊருக்குச் சென்றான்.



# தங்க ரகசியம்

கபிலபுரத்துப் பணக்காரர்களில் ஒருவன் கங்காதரன். அவனது மாமனாரும் பணக்காரரே. அவனுக்கு வேலை செய்து சம்பாதிக்க வேண்டுமென்ற அவசியமே இல்லை. அதனால் அவன் மனம் பித்தளையைத் தங்கமாக்கும் ரசவாத முறையைக் கற்கப் பெரிதும் ஆசைப்பட்டது. இதற்காகப் பணம் செலவு செய்து எவ்வளவோ பரீட்சைகள் செய்து பார்த்தான். ஒன்றும் பயனளிக்காது போகவே, அவன் மனம் ஒடிந்து போனான்.

கங்காதரனின் மனைவி மிகவும் புத்திசாலி. இருக்கும் பணத்தைக் கொண்டு நன்கு அனுபவிக்காமல் தன் கணவன் ஏன் தான் இவ்வாறு தங்கமாக்கும் ரசவாத முறையைக் கற்க முயன்று பணத்தை வீணாகச் செலவு செய்கிறானோ என்று அவள் கவலைப்படலானாள். அதனால் அவள் பணத்தை இறுக்கிப் பிடித்துத் தன் கணவன் செலவு செய்வதைக் கட்டுப் படுத்தி வந்தாள்.

என்ன தான் அவள் கட்டுப் படுத்திப் பார்த்தாலும் அவளால் தன் கணவனின் போக்கை மாற்ற முடியவில்லை. இரவு பகலாக ரசவாத முறையைக் கற்பதிலேயே நாட்டமாக இருந்த கங்காதரனுக்குத் தன் மனைவியின் கட்டுப்பாடுகளெல்லாம் பிடிக்கவே இல்லை. அவன் பணத்தை தண்ணீர் போல இறைத்துக் கொண்டிருந்தான்.

அவன் மனைவி இருக்கிற பணமெல்லாம் கரைந்து போகிறதே என்று கூறும் போதெல்லாம் அவன், "கவலைப்படாதே. ரசவாதம் கற்று வீடு முழுவதிலும் தங்கக் கட்டிகளாக அடுக்கி விடுகிறேன். பார்!" என்று கூறி வந்தான்.

இப்படியே விட்டால் தன் கணவன் சொத்தை எல்லாம் போக்கடித்து

விடுவான் எனப் பயந்து அவள் தன் பிறந்த வீட்டிற்குப் போய்த் தன் தந்தையிடம் தன் கணவன் நிலை பற்றிக் கூறவே, வயதானவரும், அனுபவமிக்கவருமான அவர் தன் மகளிடம், "கவலைப்படாதே. நான் மாப்பிள்ளையிடம் இது பற்றிப் பேசுகிறேன்" என்று ஆறுதல் கூறினார். இதன் பிறகு அவர் கங்காதரனைத் தம் ஊருக்கு வரச்சொன்னார். அவன் வந்ததும், "என்ன மாப்பிள்ளை! ரசவாத முறையைக் கற்றுக் கொண்டு விட்டீர்களா?" என்று கேட்டார்.

கங்காதரனும் உற்சாகத்துடன், தான் செய்த பரீட்சைகளை எல்லாம் விவரித்தான். அதைக் கேட்ட அவனது மாமனார், "மாப்பிள்ளை! இவ்வளவு நாட்களை வீணடித்து விட்டீர்களே! எனக்கு பித்தளையைத் தங்கமாக்கும் முறை தெரியும். அதற்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் சேகரித்து வைத்திருக்கிறேன். ஆனால் ஒரே ஒரு பொருள் மட்டும் கிடைத்து விட்டால் அதை அப்பொருள்களோடு சேர்த்துத் தங்கம் தயாரிக்கலாம். ஆனால் நான் சேகரிக்க வேண்டிய பொருளை இந்த வயதான காலத்தில் என்னால் அடைய முடியாது. அதற்காக நானே உழைக்க வேண்டும். அதை அடைய நீண்ட காலமும் பிடிக்கும். அதற்கு மிகவும் பொறுமையும், முயற்சியும் வேண்டும்" என்றார்.

கங்காதரனும், "அப்படியா? நான் இளைஞன். என்னால் உழைக்க முடியும். நீங்கள் சொன்ன பொருள்



கிடைத்ததும் தங்கம் நிச்சயமாகக் கிடைக்கும் என்றால் எவ்வளவு நாட்களுக்கு வேண்டுமானாலும் பொறுமையுடன் வேலை செய்ய நான் தயார்" என்று உற்சாகத்துடன் கூறினான்.

அவனது மாமனாரும், "சரி, சொல்கிறேன். கவனமாகக் கேளுங்கள். வாழை மரத்தில் இலைகளைப் பார்த்திருக்கிறீர்களல்லவா? ஒவ்வொரு இலையின் நுனியிலும் ஓர் அங்குல நீளத்திற்கு வால் போல பிசிறு இருக்கும். அதனைக் கிள்ளி எடுத்து, ஒரு வீசை எடைக்குச் சேகரிக்க வேண்டும்" என்றார். கங்காதரனும், "பூ! இவ்வளவு தானா? நான் சேகரித்து விடுகிறேன்" என்றான்.

அவனது மாமனாரும், "பொறுங்கள் மாப்பிள்ளை! இன்னும் சொல்ல வேண்டியது இருக்கிறது. முதலில்




குழி தோண்டி நான் சொல்லிக் கொடுக்கும் மந்திரத்தை உச்சரித்த வாறே ஒவ்வொரு வாழைக் கன்றை யும் நீங்களே உங்கள் கையால் நட வேண்டும். அவை வளர்ந்து இலை கள் விட்டதும் அந்த இலைகளின் நுனிகளிலுள்ள வால் பிசிறுகளைக் கிள்ளி எடுத்துச் சேகரிக்க வேண்டும். ஒரு வீசை பிசிறு சேர்க்க எவ்வளவோ வாழை மரங்களை நட வேண்டும். அவற்றின் இலைகளின் நுனிப் பிசிறு களைக் கிள்ளி எடுக்க வேண்டும். ஒரு வீசை பிசிறு சேர்க்க நான்கைந்து வருடங்கள் ஆகலாம். இதற்கு உங் களுக்குப் பொறுமை இருக்கிறதா?'' என்று கேட்டார்.

கங்காதரனும், "பொறுமை இருக் கிறது. வாழைக் கன்றுகளை மந்திரங் களைக் கூறி நான் நடுகிறேன். அந்த மந்திரங்களைக் கற்றுக் கொடுங்கள்'' என்றான். அவனது மாமனாரும், "மந் திரத்தைக் கற்றுக் கொடுக்கிறேன். இதற்குப் பெரிய வாழைத் தோட்டம் வேண்டும். அதை வாங்க நானும் கொஞ்சம் பணம் கொடுக்கிறேன்'' என்றார்.

வாழைத் தோட்டம் இரண்டு ஏக் கர் பரப்பில் வாங்கப்பட்டது. கங்கா தரன் அந்நிலத்தில் குழிகள் தோண்டி ஒவ்வொரு வாழைக் கன்றாகத் தன் மாமனார் சொல்லிக் கொடுத்த மந்திரத்தைக் கூறியவாறே நட்டான். பல நூறு வாழைக் கன்றுகளை நட வேண்டியிருந்தது. அவை மரங்களாகி

இலைகள் விட்டன. கங்காதரன் அந்த இலைகளின் நுனிகளில் தொங்கிய வால்ப் பிசிறுகளைக் கிள்ளி எடுத்துச் சேர்த்து வைப்பதில் மட்டுமே கவனத்தைச் செலுத்தினான்.

கங்காதரனின் மனைவியோ வாழை இலை, வாழைக்காய், வாழைப்பூ, வாழைத் தண்டு, வாழை மட்டை என்று எல்லாவற்றையும் தன் ஊரிலும், வெளியூர்களிலும் விற்றுப் பணமாக்கிக் கொண்டே இருந்தாள். கங்காதரன் அவற்றைப் பற்றிக் கவலைப்படவில்லை. வால் பிசிறுகளைச் சேகரிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தான்.

இப்படியாக நான்கு ஆண்டுகள் கழிந்தன. கங்காதரனின் மனைவி ஒரு நாள் தான் விற்றுச் சேர்த்த பணத்தை எண்ணிப் பார்த்தாள். மொத்தம் ஐம்பதாயிரம் ரூபாய்கள் இருந்தன. அவளது மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. இதே சமயம் ஒரு நாள் கங்காதரன் தான் சேகரித்த வாழை இலைப் பிசிறுகளை நிறுத்துப் பார்த்தான். அது ஒரு வீசை இருந்தது. அவன் மகிழ்ச்சி பொங்கத் தன் மாமனாரிடம் ஓடிப்போய், "நீங்கள் கூறியபடி ஒரு வீசை பிசிறு சேர்த்து விட்டேன். இனி உங்களிடமுள்ள மற்ற பொருள்களோடு சேர்த்து தங்கம் தயாரித்து விடலாம்", என்றான்.

அவனது மாமனாரும் தன் மகள் சேர்த்த பணத்தைக் காட்டி, "எல்லாம் நம் வாழைத் தோட்டத்திலிருந்துதான். உங்கள் உழைப்பாலும், உங்கள் மனைவியின் சாமர்த்தியத்தாலும் தான். இதைக் கொண்டு நீங்கள் எவ்வளவு தங்கம் வேண்டுமானாலும் வாங்கலாம். நான் கூறிய வாழைப் பிசிறு எதையும் தராது. நீங்கள் இப்படி உழைத்துச் சம்பாதிக்கவே எனக்கு தங்கம் செய்யும் ரசவாத முறை தெரியும் என்று ஒரு பொய்யைச் சொன்னேன்", என்றார்.

கங்காதரனின் பிரமை தொலைந்தது. அப்போதே ரசவாத முறையைக் கண்டுபிடிக்கும் முயற்சியை விட்டு வாழைத் தோட்டத்தைக் கண்ணும் கருத்துமாகக் கவனிக்கலானான். தனக்கு உண்மையை உணர்த்திய தன் மாமனாருக்குத் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டான்.



# நம் இந்தியா

## வினாக்கள்

இந்த இதழில் காந்திஜீ 'இந்தியாவின் வானம்பாடி' எனப் புகழாரம் சூட்டிய 'கவிக்குயில்' சரோஜினி நாயுடுவைப் பற்றி வெளியாகியுள்ளதைப் படித்திருப்பீர்கள். நம் நாட்டின் மற்ற பெண்மணிகளைப் பற்றி நீங்கள் எவ்வளவு அறிந்து கொண்டிருக்கிறீர்களெனப் பார்ப்போமா ?

1. டில்லி இந்தியாவின் தலைநகராகுமுன் கூட அங்கு ஒரு பெண்மணி அரசியாக இருந்தார். அவர் யார்?
2. இந்தியாவில் குடியேறிய அயல்நாட்டுப் பெண்மணி ஒருவர் 'பாரத ரத்னா' பட்டத் தையும் நோபல் பரிசையும் பெற்றார். அவர் யார்?
3. ஒரு பெண்மணியின் உருவம் பதித்த நாணயம் வெளியிடப்பட்டது. அப்பெண் மணி யார்?
4. ஜவாஹர்லால் நேருவின் முதலாவது அமைச்சரவையில் இடம் பெற்ற பெண் மணி யார்?
5. நேதாஜீ சுபாஷ் சந்திரபோஸின் 'ஆஜாத் ஹிந்த்' அரசாங்கத்தில் இடம் பெற்ற பெண்மணி யார்?
6. இந்திய தேசியக் காங்கிரஸின் தலைமை பதவியைப் பெற்ற முதல் பெண்மணி யார்?
7. மாநிலங்களின் அவைக்கு நியமிக்கப்பட்ட முதலாவது நடிகை யார்?
8. தென்னிந்தியாவின் பிரபல பாடகி ஹிந்தி திரைப்படமான 'பக்த மீரா'வில் நடித்தார். யார் அவர்?
9. எந்த இந்தியப் பெண்மணி தன் முதலாவது நாவலுக்காக புக்கர் பரிசைப் பெற்றார்?
10. ஞானபீடப் பரிசைப் பெற்ற முதலாவது பெண்மணி யார்?
11. பாரிஸின் கிராண்ட் சலோனின் உறுப்பினரான முதலாவது இந்திய ஆசியப் பெண்மணி யார்?
12. கின்னஸ் புத்தகத்தில் சாதனை படைத்தவ ரென இடம் பெற்ற இந்தியப் பாடகி யார்? அவரது சாதனை என்ன?

*(விடைகள் அடுத்த மாதத்தில்)*

# மூட்டை ரகசியம்

ஒரு வியாபாரிக்கு இரண்டு மகன்கள் இருந்தார்கள். மூத்தவன் கெட்டவன். மோசக்காரன். இளையவன் அப்பாவி. சூதுவாது எதுவும் தெரியாதவன். வியாபாரி தனக்குப் பின் தன் இளைய மகனுக்கு சொத்தில் எதுவும் கொடுக்காமல் ஏமாற்றிவிடுவான் என்பதை உணர்ந்தான். அதனால் அவன் தக்க ஏற்பாடு ஒன்றைச் செய்து தன் மகன்களையும் அழைத்து, "என் பணத்தை எல்லாம் இரு மூட்டைகளில் சமமாக வைத்துக் கட்டி நம் வீட்டு மேற்குப்புற அறையில் வைத்திருக்கிறேன். நீங்கள் இருவரும் ஆளுக்கு ஒரு மூட்டையாக எடுத்துக் கொள்ளுங்கள்", எனக் கூறிவிட்டுக் கண்ணை மூடினான்.

தந்தைக்கு ஈமக்கிரியைகளைச் செய்து முடித்த பின் மூத்த மகன் அன்றிரவு யார் கண்ணிலும் படாமல் மேற்குப்புற அறைக்குள் போய் இரு மூட்டைகளையும் அவிழ்த்துப் பார்த்தான். முதல் மூட்டையில் மேல் பாதியில் வெள்ளி நாணயங்களும், கீழ்ப்பாதியில் மண் உருண்டைகளும் இருந்தன. இரண்டாவது மூட்டையில் மேல் பாதியில் மண் உருண்டைகளாயும், அடிப்பாதியில் வெள்ளி நாணயங்களாகவும் இருந்தன. மூத்த மகன் அவற்றைக் கீழே கொட்டி வெள்ளி நாணயங்களை எல்லாம் ஒரு மூட்டையிலும் மண் உருண்டைகளை எல்லாம் இன்னொரு மூட்டையிலும் கட்டி வைத்தான்.

மறுநாள் காலையில் அவன் தன் தம்பியை அழைத்துக் கொண்டு மேற்குப்புற அறைக்குப் போய் தான் முன் தினம் கட்டி வைத்த வெள்ளி நாணய மூட்டையை எடுத்துக் கொண்டு, "தம்பி! நீ அந்த மூட்டையை எடுத்துக் கொள்", என்று கூறி மண் உருண்டை மூட்டையைக் காட்டினான். அண்ணன் தன் மூட்டையை எடுத்துக் கொண்டு போனபின் தம்பி மூட்டையை அவழ்த்து உள்ளே மண் உருண்டைகள் இருப்பதைக் பார்த்தான். அவன் அவற்றை உடைக்கவே, அவற்றிலிருந்து தங்க நாணயங்கள் விழுந்தன.





# மீண்டும் குளித்தான்

காவேரி நதிக்கரையில் ஒரு குடிசையை அமைத்துக் கொண்டு ஒரு சன்னியாசி இருந்து வந்தார். அக் குடிசைக்கு அருகிலுள்ள கிராம வாசிகள் அவரை சக்தி வாய்ந்தவர் எனக்கருதி வணங்கி வழிபட்டு தினமும் உணவு அளித்து வந்தார்கள். கிராமவாசிகள் தம் பால் கொண்ட பக்தியைக் கண்டு அவர் மக்கள் தாம் சொல்வதை எல்லாம் வேத வாக்காக எடுத்துக் கொள்ள வேண்டும் என எண்ணிவிட்டார்.

அவரது குடிசைக்குச் சற்றுத் தள்ளி ஒரு பாறை இருந்தது. தினமும் அதிகாலையில் எழுந்து போய் ஆற்றில் குளித்துவிட்டு அந்தப் பாறை மீது அமர்ந்து தியானம் செய்வதை வழக்கமாகக் கொண்டார். தான் தியானம் செய்து கொண்டிருக்கும் போது அந்தப் பாறையின் பக்கம் யாரும் வரக் கூடாது என்று கிராமவாசிகளுக்கு கட்டளையும் இட்டிருந்தார். கிராமவாசிகளும் அவருக்குப் பயந்து அவர் தியானத்தில் பாறை மீது அமர்ந்திருக்கும்போது அந்தப் பக்கம் செல்லாமல் சற்று தள்ளிப்போய் ஆற்றில் குளிக்கலாயினர்.

வழக்கப்படி ஒரு நாள் காலை அந்த சன்னியாசி ஆற்றில் குளித்துவிட்டு பாறை மீது உட்கார்ந்து தியானத்தில் மூழ்கி இருந்தார். அப்போது ஒரு சிறுவன் அப்பாறையருகே வந்து ஆற்றில் தொப்பென்று குதித்து நீந்தலானான். அவன் நீரில் விழுந்த சத்தம் சன்னியாசியின் தியானத்தைக் கலைத்தது. அச்சிறுவனின் நீச்சலால் உயரக் கிளம்பிய நீர்த்துளிகள் அச்சன்னியாசியின் மீது விழுந்தன.

சன்னியாசி கோபம் கொண்டு, "ஏய் பொடிப்பயலே! வாடா இங்கே. நான் யார் தெரியுமா? என்ன திமிர் உனக்கு!" என்று கத்தினார். ஆனால்

பாபநாசம் சாமா

உடனே ஆற்றிலிருந்து வராமல் சற்று நேரம் கழித்தே கரை ஏறி வந்தான். அவனைக் கண்டதுமே கோபம் கொண்டு ஓடிப்போய் அச்சிறுவனின் கன்னத்தில் பளாரென்று ஒரு அறை விட்டார்.

அதே சமயம் ஒரு வாலிபன் இரைக்க-இரைக்க ஓடி வந்து சற்று தூரத்தில் நின்று சன்னியாசியை வணங்கி, "சுவாமி! அவன் என் மைத்துனன். நேற்று தான் இந்த ஊருக்கு வந்தான். இந்த இடம் பற்றித் தெரியாது. இவனை மன்னித்து விடுங்கள்" என்று வேண்டினான். அவரும் அவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "ஓ! நீயா! இவன் உன் மைத்துனனா? சரி. இன்னொரு தடவை என்னைக் குளிக்க வைத்து விட்டான்" என்று கூறிவிட்டு நதியில் குளிக்கச் சென்றார்.

அப்போது அச்சிறுவன், "இவர் ஏன் இன்னொரு முறை குளிக்க வேண்டும்? முன்பே குளித்து விட்டு நெற்றியிலும் உடலிலும் திருநீறு பூசிக் கொண்டிருந்தாரே!" என்று கேட்டான். அந்த வாலிபனும், "நாமெல்லாம் தீண்டத் தகாதவர்களாம். அவர் உன்னைத் தொட்டு விட்டதால் தீட்டு பட்டதாக எண்ணித் தான் குளிக்கப் போயிருக்கிறார்" என்றான்.

உடனே அச்சிறுவன், "நானும் இன்னொரு தடவை குளிக்கப் போகிறேன். ஏனென்றால் அந்த சன்னியாசி கோபத்தோடு கண்களை உருட்டிப் பார்த்தபோது அவர் என் கண்களுக்கு ஒரு பிசாசாகத் தான் தோன்றினார். பிசாசு தொட்டால் குளிக்கத் தானே வேண்டும்" என்று கூறினான்.

இதைக் கேட்டுக் கொண்டே வந்த சன்னியாசி தன் கன்னத்தில் அறை வாங்கியது போல உணர்ந்தார். அவர் அச்சிறுவனை அணுகி, "உண்மை தான். நான் பிசாசே. தீண்டாமை, அகங்காரம், கோபம் என்று பல பிசாசுகள் என்னுள் உள்ளன. உண்மையில் தீண்டத்தகாதவன் நான் தான். நீ அல்ல." என்று கூறி தன்னை விழுந்து வணங்க வந்த அச்சிறுவனை தூக்கிக் கட்டித் தழுவிக் கொண்டார்.





# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

**போட்டோ வாக்கியப் போட்டி**

*(முகவரி கீழே தரப்பட்டுள்ளது)*





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி பிப்ரவரி 25-ம் தேதிக்குள் வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் ஏப்ரல் 2001 மாத இதழில் வெளியிடப்படும். சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

**வாழ்த்துக்கள்**



**டிசம்பர் 2000 போட்டியில்**
பரிசு பெற்றவர் :
**திருமதி. ஏ. ஜெயஸ்ரீ**
3-ஜி/95, ஃப்ளாட் நெ.202
சுமன் அபார்ட்மெண்ட்ஸ்
கோரேபெட்,நாக்பூர் - 10.



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவது போட்டோ : மரத்தால் உருவான வண்டி

இரண்டாவது போட்டோ : வண்டியை உருவாக்கும் மரம்

